

# மனம் இறக்கும் கலை!

மொழி பெயர்ப்பு :

சுவாமி ஆனந்த் பரமேஷ்

(1976-ஆம் வருடம் அக்டோபர் மாதம் 11-ஆம் தேதி முதல் 20-ஆம் தேதி வரை பூனா ஆஸ்ரமத்தில், ஓஷோ ஆற்றிய சொற்பொழிவுகளின் தொகுப்பு இது. ஆங்கில ('The Art of Dying') நூலை நேரடியாக மொழி பெயர்த்து முதல் இரண்டு அத்தியாயங்கள் வெளியிடப் பட்டுள்ளன.)




நர்மதா பதிப்பகம்
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
10, நானா தெரு, (தி.நகர் தலைமை
அஞ்சலகத்தை ஒட்டிய தெரு), பாண்டி பஜார்,
தி.நகர், சென்னை - 600 017. தொலைபேசி : 24334397
செல்லிடபேசி : 9840 226661, தொலைநகல் : 24 33 63 12

''ஓஷோ பிறக்கவும் இல்லை; இறக்கவும் இல்லை. இந்த பூமிக்கு விஜயம் செய்த நாள் 11–12–1931இலிருந்து 19–1–1990 வரை.''

பகவான் ஸ்ரீ ரஜனீஷ், இப்போது ஓஷோ (OSHO) என்று அழைக்கப்படுகிறார். 'வில்லியம் ஜேம்ஸ் (William James) கூறிய 'ஓஷியானிக்' (Oceanic) என்ற வார்த்தையிலிருந்து என் பெயர் மாற்றம் அடைந்திருக்கிறது' என்று ஓஷோ விளக்கினார். இதன் அர்த்தம் என்னவென்றால் 'கடலுடன் ஒன்றிக் கலப்பது' என்பது. ஓஷியானிக் என்பது உள் அனுபவத்தை விளக்குவது. அந்த அனுபவத்தை அனுபவிப்பவரை எப்படி அழைப்பது ? அதற்கு பகவான் 'ஓஷோ' என்று அழையுங்கள் என்கிறார். சரித்திரப்பூர்வமாக முன்பு, இந்த வார்த்தையை, தூரக்கீழை நாட்டில் (Far East), ஞானம் அடைந்தவர்களுக்கு, கடவுளால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களுக்கு, சூட்டி இருக்கிறார்கள் என்று பிறகு தெரியவந்திருக்கிறது. இனிமேல், தன்னை வெறும் 'ஓஷோ' என்று மட்டும் அழைக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்.

Email : narmadhamail@yahoo.co.in ❖ Website : www.newbooklands.com



Pages : 128

PRICE Rs.50-00

Paper used : 13.6 Kg SPB N.S

☐ Manam Irakkum Kalai - The Art of Dying (By Osho) Translated into Tamil by Swami Anand Paramesh ☐ This Edition : May 2009 ☐ Published by T.S.Raamalingam, Narmadha Pathipagam, Chennai - 600 017 ☐ D.T.P. Execution by : Sri Vigneshwara Graphics, Chennai-49.Ph: 26503802 ☐ Printed at :M/s. Malar Printers, Chennai - 34.☐



# முன்னுரை

ஒவ்வொருவருக்கும் நன்றாகத் தெரிந்த விஷயம் என்னவென்றால், இறப்பு என்பது மற்ற ஜனங்களுக்கும், அயல் நாட்டவர்களுக்கும், மற்றும் நாய் போன்ற விலங்கினங்களுக்கும் சாதாரணமாக நிகழக்கூடியதொன்று என்பதாகும். ஆனால் அது தனக்கும் நேரும் என்பதை அவர்களால் நினைத்துப் பார்க்க இயலவில்லை.

அந்த இயல்பான இறப்பை சந்திக்கக்கூடிய வல்லமையை இந்தப் புத்தகம் உங்களுக்கு அளிக்கிறது. சந்திப்பது மாத்திரம் அல்ல, அதை மிக உற்சாகத்துடனும் ஆவலுடனும் எதிர்நோக்கும் வகையில் அமைந்துள்ளது. அதேசமயம், அதை மிகவும் ஒய்வாகவும் அங்கீகரித்து, அதனுடன் முழு ஒத்துழைப்புக் கொடுத்து இயைந்து செல்லவும் வழி வகுக்கிறது.

இதில் ஓஷோ பத்து நாட்கள் பூனா ஆஸ்ரமத்தில் தினசரி ஆற்றிய சொற்பொழிவுகள் அடங்கி உள்ளன. இதில் ஐந்து, ஹேசிடிக் (Hasidic) கதைகளை ஆதாரமாகக் கொண்டவை; அடுத்த ஐந்து, அவரைப் பின்பற்றுபவர்கள் கேட்ட கேள்விகளுக்கு, பதிலாக அளித்தவை.

ஒவ்வொரு மாதமும், ஓஷோவின் சொற்பொழிவுகள், ஒரு மதத்திலிருந்து இன்னொரு மதத்திற்கும், உதாரணமாக, சூஃபிசத்திலிருந்து (Sufism) தாவோவுக்கும் (Tao), ஜைனத்திலிருந்து ஹேசிடிசத்திற்கும் (Hasidisim) ஜீசஸிலிருந்து, சாங்க்சூவுக்கும் (ChuangTzu) மாறி மாறி நிகழ்ந்தன. இந்த பழைய மதங்களில் ஊடுருவி வரும்பொழுது, அவர் தன் உண்மையான நிலையிலிருந்து ஒருபோதும் நழுவியதில்லை.

ஒரு சமயம், ஓர் அமெரிக்க இளம் சிஷ்யன் ஒஷோவை குருவாக ஏற்றுக்கொண்ட பிறகு, இஸ்ரேலில் உள்ள தன் பெற்றோர்களுடன் சேர கிளம்புவதற்கு மிகவும் தயக்கம் காட்டுகிறான். அவர்கள் ஓர் இந்தியனை, குருவாக எண்ண விரும்பமாட்டார்கள். ஆகவே ஓஷோ அவனிடம், "அவர்களிடம், நான் ஒரு வயதான யூதன் என்று பொய் சொல்" என்றார். அப்பொழுது அந்த சிஷ்யன் சிரித்து மிகவும் இறுக்கம் குறைந்தவனானான். வித்தியாசமான ஜோக்குகளைச் சொல்வதில் ஓஷோ மிகவும் திறமைசாலி. அவை எல்லாராலும் மிகவும் ரசிக்கத் தக்கவை. அவற்றில் ஒன்று எப்பொழுதும் என் ஞாபகத்தில் இருக்கிறது. அதாவது,

ஒரு சமயம், மூன்று 'சிரிக்கும் சந்நியாசிகள்' கிராமம் கிராமமாகச் சென்று கொண்டிருந்தார்கள். ஒரு கிராமத்திற்குச் சென்றால், அங்குள்ள சந்தைக் கடைகளின் பக்கத்தில் உட்கார்ந்து மூவரும் எந்தக் காரணமும் இன்றி பலமாக சிரித்தவாறே இருப்பார்கள். இவர்களைப் பார்க்கும் மக்கள் வியந்து, கூடி நின்று வேடிக்கைப் பார்த்து, பிறகு ஒவ்வொருவராக, அவர்களைப் போலவே வயிறு வெடிக்க சிரிக்க ஆரம்பித்துவிடுவார்கள். அப்பொழுது அவர்கள் கண்களிலிருந்து நீர்கூட வரும். அந்த அளவுக்குச் சிரிப்பார்கள்.

ஒரு நாள் அவர்களில் ஒருவர் இறந்துவிட்டார். அவரை எரிக்க தூக்கிச் சென்றபொழுது மக்களும் உடன் சென்றனர். அப்பொழுதும் மீதி இருந்த அந்த இரண்டு சந்நியாசிகளும் சிரித்தவாறே வந்தனர். இதைப் பார்த்ததும் மக்களுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஒருவாறாக, அவரை சிதையில் வைத்து அவருடைய உடையை எடுக்க ஆரம்பித்தனர். ஆனால் இரண்டு சந்நியாசிகளும் அதைத் தடுத்து, தம் நண்பன், தான் இறந்தால் தன் உடையோடுதான் தன்னை எரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டதாக சொல்லி, அப்படியே வைத்து தீயிட்டனர்.

அதற்குக் காரணம், சிதைக்குத் தீயிட்ட பிறகுதான் புரிந்தது. ஏனெனில், தீ பரவப் பரவ, பலவித வெடிச்சப்தங்கள் அந்த சிதையிலிருந்து கிளம்பின. பலவித வர்ண ஒளிகள் ஆகாயத்தில் கிளம்பின.

அந்த சந்நியாசி, தான் இறக்கப்போகிறோம் என்று தெரிந்து, முன்கூட்டியே பலவித பட்டாசு வெடிகளை தன் உடையில் மறைத்து வைத்திருந்தார். இப்பொழுது மற்ற இரண்டு சந்நியாசிகளோடு ஏனைய மக்களும் சேர்ந்து வயிறு வெடிக்கச் சிரித்தார்கள்.

இதைச் சொல்லும்போது ஓஷோ மிகவும் இயல்பாக ஒரு சிறிய புன்னகையுடன் சொல்லுவதைப் பார்ப்பது ஒரு கண்கொள்ளாக் காட்சி.

அதைப்போல, சென்ற வருடம், இங்குள்ள ஒரு பெண் சந்நியாசி இறந்தபொழுது இதைப்போல ஒரு மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியாக அது ஆக்கப்பட்டது. அவள் சாதாரணமாக ஆடிக்கொண்டும், பாடிக் கொண்டும், மிகவும் மகிழ்ச்சியாக எப்பொழுதும் சிரித்துக்கொண்டே இருப்பாள். ஆகவே, அவளது இறப்பையும் நாங்களெல்லாம் ஆடியும், பாடியும், சிரித்தும் கொண்டாடி தீயில் இட்டோம். பல நட்சத்திரங் களுக்குக் கீழே, ஓர் ஆற்றின் கரையில் அவளை சிதையில் வைத்து எரிக்கும்பொழுது பலவித வர்ண உடைகள் அணிந்த சந்நியாசிகள் சுற்றி நின்று பட்டாசு வெடிகளைக் கொளுத்திக் கொண்டாடும் பொழுது, அந்த இடம் வர்ணஜாலங்கள் நிரம்பியதாக இருந்தது. ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்.

முதன்முதலில் அப்பொழுதுதான் ஓஷோ சொல்லியது போல் "இறப்பும் ஒரு கொண்டாட்டமே" என்பதை சரியாகப் புரிந்து கொண்டோம்.

**– சுவாமி ஆனந்த் தேவேஷ், மா பிரேமா வீணா**

□□□



# நன்றி

நம் வாழ்வில் இரண்டு மாபெரும் நிகழ்ச்சிகள் நம்முடைய அனுமதி இல்லாமல் நேருகின்றன. ஒன்று பிறப்பு. அடுத்தது இறப்பு. நாம் பிறக்கும்பொழுதே இறப்பும் கூடவே பிறக்கிறது.

இந்த பிறப்புக்கும், இறப்புக்கும் இடைப்பட்ட காலமே வாழ்வு. இந்த வாழ்வின் அமைப்பு, பெரும்பாலும் நம் கையில்தான் இருக்கிறது. சிறு வயதில் கோலி, நீச்சல், ஓடுதல் போன்ற விளையாட்டுப் பந்தயங்களில் ஜெயிக்க வேண்டும் என்ற ஆர்வம்,பிறகு பணம், அந்தஸ்து, படிப்பு, வசதிகள் போன்றவற்றில் அடுத்தவர்களைவிட நாம் உயர்வாக இருக்க வேண்டும் என்ற கொள்கையாக மாறுகிறது. ஆக, மனிதனின் மனம் அடிப்படையில் மாறவே இல்லை. இலக்குதான் மாறி இருக்கிறது.

இதை ஒருவன் எவ்வளவு சீக்கிரம் புரிந்து கொள்ளுகிறானோ அவ்வளவு சீக்கிரம் அவன் பார்வையின் கோணம் மாறுகிறது. உலகத்தை நோக்கியே நிற்கும் தன் பார்வையை (Extrovert) 180 டிகிரி திருப்பி, தன்னை நோக்க ஆரம்பிக்கிறான் (Introvert). இந்த உலகத்துப் பொருள்களுக்கு ஆசைப்படுபவன் யார் ? அதனால் முடிவில் அடையப் போகும் பயன் என்ன ? என்று ஆராயத் தொடங்குகிறான். ஒருவனின் ஞானம் இங்குதான் ஆரம்பமாகிறது. ஒரு விழிப்புணர்வு உண்டாகிறது.

இந்த விழிப்புணர்வோடு நாம் இந்த இடைப்பட்ட வாழ்வை வாழ ஆரம்பித்தால், அது ஆனந்தமயமாகிறது. இந்த ஆனந்தமயமான வாழ்வே பேரானந்தத்திற்கு வழி வகுக்கிறது. மனதோடு கூடிய உங்கள் வாழ்வு உலகப் பற்று உடையது. அது எப்பொழுதும் உலகத்தை நோக்கியே செல்லும். அப்படிச் செல்லும் மனதை இறுக்கம் (Seriousness) நிறைந்ததாக ஆக்காமல், மகிழ்ச்சியாக, கொண்டாட்டமாக, ஆனந்தமாக, அன்பும், கருணையும் உடையதாக ஆக்குங்கள். இப்படி இலேசாகும் மனம், தன்னைச் சுலபமாகப் பார்க்க ஆரம்பிக்கும். இது ஒரு கலைதான்.

இதைத்தான் ஓஷோ அவர்கள், இந்நூல் மூலம் பல பரிமாணங்களில் விளக்குகிறார். இந்த பிரபஞ்சம் உயிரோட்ட முடையது. சக்திமயமானது. ஆகவே, சதா மாறிக்கொண்டே இருக்கும் தன்மை உடையது. ஒன்று பிறந்தால், மற்றொன்று இறக்கிறது. ஒன்று இறந்தால் மற்றொன்று பிறக்கிறது. இதற்கு ஆரம்பமும் இல்லை. முடிவும் இல்லை. ஆகவே இடைப்பட்ட வாழ்வை, அந்த சக்தியோடு இயைந்து இயல்பாக வாழுங்கள். ஓஷோ மேற்சொல்லிய கருத்துகளைத்தான் ஆதாரமாக வைத்து, பலவித கோணங்களில் விளக்குகிறார்.

இதை மொழி பெயர்க்கத் தூண்டிய என் உள் உணர்வுக்கும், ஊக்கம் அளித்து தன்னுடைய மாதாந்தர 'ரஜனீஷ்' (ஓஷோ) பத்திரிகையில் பல பகுதிகளாக வெளியிட்ட திரு. சுவாமி மோகன் பாரதி அவர்களுக்கும் என் நன்றியும், வணக்கமும் உரித்தாகுக.

இதைப் புத்தகமாக வெளியிடும் தமிழ் மக்களுக்கு ஓஷோவை நன்றாக அறிமுகப்படுத்திவிட வேண்டும் என்று என்னைப்போலவே ஆர்வம் கொண்டுள்ள நர்மதா பதிப்பக உரிமையாளர் திரு. இராமலிங்கம் அவர்களுக்கு, என் உளமார்ந்த நன்றி என்றும் உரித்தாகும். அவர் தொண்டு சிறக்க ஓஷோவின் ஆசி கிட்டட்டும்.

**சுவாமி ஆனந்த் பரமேஷ்**

□□□

# மனம் பற்றி பத்து குறள்கள்

1. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
வாழ்வின் இடைநிலை துவக்கம்.

2. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
எண்ண அலைகளின் கூட்டு.

3. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
வாழ்வில் இடைநிலை எஜமான்.

4. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
உயிரின் படர்க்கை நிலை.

5. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
புலன் – ஐந்தின் செயல் குவியல்.

6. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
சக்தியின் சிதறிய மாயை.

7. மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
நிகழ்காலமற்ற நிலையாம்.

மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
மகிழ்ச்சியின் நண்பனும் பகைவனும்.

மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
இறைத்தன்மையின் முதல் எதிரி.

மனம் எனப்படுவது யாதெனில் உந்தன்
விழிப்பை மறைக்கும் மேகம்.

சுவாமி ஆனந்த் பரமேஷ்





# ஓஷோவின் வாழ்க்கைக் குறிப்புகள்

1931 – ஓஷோ அவர்கள் 1931–ஆம் வருடம், டிசம்பர் 11ஆம் தேதி மத்திய பிரதேசத்தில் உள்ள குச்வாடா (Kuchwada) என்ற சிற்றூரில் பிறந்தார். ஜெயின் மதத்தைச் சார்ந்த ஒரு தம்பதியர்க்கு மூத்த மகனாகப் பிறந்தார். அவரது தகப்பனார் ஒரு நடுத்தர துணி வியாபாரி. அவருடைய குழந்தைப் பருவத்து முதல் ஏழு வருடங்கள் அவருடைய பாட்டனார் வீட்டில் கழிந்தன.

அப்பொழுதுதான் அவருக்கு முழு சுதந்திரம் அளித்தார்கள். அப்பொழுதே அவருக்கு உண்மையைத் தெரிந்துகொள்ள ஆர்வம் மிகவும் ஏற்பட்டது. அவருடைய அணுகுமுறைகள் அத்தனையும் வித்தியாசமாகவே இருந்தன.

1938 – அவருடைய பாட்டனார் இறந்தபிறகு தன் தாய், தகப்பனுடன் கடவாரா (Gadawara) என்ற சிற்றூரில் வசிக்க நேர்ந்தது. அவரது பாட்டி, தான் இறக்கும்வரை அவருடனேயே இருந்தார்.

அந்த மூதாட்டிதான் அவருக்கு நண்பன், வழிகாட்டி, தத்துவ வாதி எல்லாம். ஒருசமயம், அந்த அம்மாள், "நான் என் பேரனின் முதல் சிஷ்யை" என்று கூறி இருக்கிறாள். அவள் இறந்தது 1970ஆம் வருடம்.

1946 – ஓஷோ அவர்கள் தனது 14ஆவது வயதில் சத்தோரி (Satori) என்ற ஞான அனுபவத்தைப் பெற்றார். இந்த இடைப்பட்ட

காலத்திலும் அதற்கு அப்பாலும், அவருடைய தியானம் மிகவும் ஆழமாகச் சென்றது.

இந்த ஆன்மிக அனுபவங்கள், அவருடைய உடலை மிகவும் பாதித்தன. இறந்து விடுவாரோ என்று அவருடைய பெற்றோர்களும் பயந்தார்கள்.

951 – 1953ஆம் வருடம் மார்ச் மாதம் 21ஆம் தேதி, தன் 21 வயதில், ஓஷோ அவர்கள், தன் உள் மையத்தை அடைந்து பூரண விழிப்பு நிலையை (Enlightenment) அடைந்தார். அப்பொழுது அவர் சொன்னதாவது: "என் வெளி உலக வாழ்க்கை நிகழ்ச்சிகள் முடிவடைந்துவிட்டன. இனிமேல் என் உள் ஆத்மீக உணர்வுப்படி அகங்காரமற்ற முழு விழிப்பு நிலையில்தான் வாழ்வேன்" என்றார்.

ஆனால் படிப்பைத் தொடர்ந்து 1956இல் முதல் வகுப்பில் தன் ஹானர்ஸ் (Honors) பட்டத்தை சாகர் யுனிவர்சிட்டியில் (Saugar University) பெற்றார். கல்லூரிகளின் பேச்சுப் போட்டியில் எப்பொழுதும் முதல் பரிசையே பெறுவார். தன் கடைசி பட்டப் படிப்பில் தங்க மெடல் பெற்றார்.

– ரெய்ப்பூரில் உள்ள சமஸ்கிருதப் பள்ளியில் சமஸ்கிருதம் ஒரு வருடம் பயின்றார். பிறகு ஜபல்பூர் யுனிவர்சிட்டியில் தத்துவப் பேராசிரியராக பதவி ஏற்றார். பிறகு 1966இல் இந்த நாகரிக சமூக அமைப்புக்கு ஏற்ற வகையில் பலவித முறைகளை வகுத்து மக்களிடம் விளக்க தன் பதவியை ராஜினாமா செய்தார்.

பிறகு பல வருடங்கள் இந்தியாவின் பல இடங்களுக்குச் சென்று தன் புரட்சிகரமான ஆத்மீகக் கருத்துக்களையும் தியான முறைகளையும் மக்களுக்கு விளக்கிக் கூறி அறிமுகப்படுத்தினார். அப்போது அவரை "ஆச்சார்யா ரஜனீஷ்" என்றே அழைத்தார்கள். மத சம்பந்தமான



அவருடைய புதிய அணுகுமுறை, பல சுய சிந்தனை யாளர்களைக் கவர்ந்தது.

1968 – ஓஷோ அவர்கள் பம்பாயில் தங்கி பல தியான முகாம்களை நடத்தினார். அப்பொழுதுதான் தன்னுடைய மிகப் புதுமையான டைனமிக் தியானத்தை அறிமுகப்படுத்தினார். மனதின் எண்ண ஓட்டங்களை நிறுத்துவதற்கு முன் 'வெளியேறுதலின்' (Catharsis) அவசியத்தை வலியுறுத்தினார். 1970இலிருந்து ஆர்வம் உள்ளவர்களுக்கு சந்நியாசம் வழங்கினார்.

அவர்களை புதிய சந்நியாசிகள் (Neo- Sannyas) என்று அழைத்தனர். ஓஷோவின் அன்பினாலும், தனிப்பட்ட அக்கறை மற்றும் வழிகாட்டுதலாலும் அவரவர்கள், தியானத்தின் மூலம் தங்கள் உள் மையத்தை நோக்கி பயணம் செய்தனர். அவரை 'பகவான்' என்றும், 'அனுக்கிரகம் பெற்றவர்' என்றும் அழைத்தனர்.

1970 – மேற்கிலிருந்து பல சுய சிந்தனையாளர்கள் இவரை நாடி வர ஆரம்பித்தனர். இவருடைய பெயரும் புகழும் வெளிநாடு களுக்கு குறிப்பாக ஐரோப்பா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா மற்றும் ஜப்பான் தேசங்களுக்குப் பரவின. 1974இல் தன் ஆஸ்ரமத்திற்காக பூனாவில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தார்.

1974 – ஓஷோ ஞானம் அடைந்த 21–ஆம் ஆண்டை பூனாவில் ஆரம்பித்த ஆஸ்ரமத்தில் முதன் முதலில் கொண்டாடி னார்கள். அவருடைய புகழ், உலகத்தில் மின்னலென்று பரவியது. ஆனால் ஓஷோ அடிக்கடி தனிமையை நாடினார் ஒரு நாளைக்கு இருமுறைதான் சீடர்களுக்கு தரிசனம் கொடுத்தார். அப்பொழுது காலையில் ஆத்மீக விளக்கமும் மாலையில் தீட்சையும், கேள்விகளுக்கு பதிலும், அறிவுரையும் வழங்கினார். இரண்டே வருடங்களில் ஆஸ்ரமம் மிகப் பெரி வளர்ச்சி அடைந்தது.

உலக மக்கள் வெள்ளமென வரத் தொடங்கினர். பல வித்தியாசமான தியான பூஜைகள் அறிமுகப்படுத்தப்பட்டன. அவருடைய புலமையும், ஆழ்ந்த அறிவும், தீர்க்க தரிசனமும், எதையும் ஆழ்ந்து பார்க்கும் நுண்ணறிவும், எளிமையாகவும், விகடமாகவும் விளக்கிச் சொல்லும் திறனும், பல அறிஞர் பெருமக்களைக் கவர்ந்ததில் வியப்பில்லை. அப்போது வெளிப்பட்ட அவருடைய விளக்கங்கள் மிக ஆழமானவை. அவற்றை நாடாவில் பதிவு செய்து புத்தகமாக வெளியிட்டார்கள். உண்மையை அறிந்து கொள்ளுவதில் ஆர்வம் உடையவர்களுக்கு பூனா ஒரு மெக்காவாகி விட்டது. அங்கு கிழக்கும், மேற்கும் இரண்டறக் கலந்தன.

“இந்த அறிவு சார்ந்த 20–ஆம் நூற்றாண்டுக்கு பழைய மதங்களின் கொள்கை, தத்துவம் எதுவும் சரியாக வராது. கடவுள் தன்மையை அடைய தியானத்தைத் தவிர வேறு வழி கிடையாது. பிரார்த்தனை மற்றும் சடங்குகள் மூலமாக எதையும் நீங்கள் அடைய முடியாது” என்று உறுதியாகச் சொன்னார். இது அவருக்கு பல பகைவர்களைத் தோற்றுவித்தது.

– இந்து வெறியாளன் ஒருவன் அவர் உரையாற்றும்பொழுது அவரைக் கொலை செய்ய முயன்றான். ஆனால் தப்பித்து விட்டார். அவருடைய சீடர்கள் மற்றும் ஆதரவாளர்கள் பல லட்சக்கணக்கில் இப்பொழுது உலகம் பூராவும் பெருகினர்.

– மே மாதம் முதல் தேதியில் தன் பேச்சை நிறுத்திக் கொண்டு அமைதியாக, இதயத்தோடு– இதயம் பேசுதல் என்ற வழியைப் பின்பற்றினார். அத்துடன் அவருக்கு முதுகில் வலி ஏற்பட்டது. அதை அறுவை சிகிச்சை மூலம் குணப்படுத்த அவரை, அவருடைய அமெரிக்க சீடர்கள் அங்கு கொண்டு சென்றார்கள்.



அவர்கள் அமெரிக்காவில் ஓஷோவைக் கொண்டு ஆஸ்ரமம் அமைக்க மத்திய ஓரிகான் பாலைவனப் பகுதியில் சுமார் 64,000 ஏக்கர் நிலத்தை வாங்கி பசுமைக் காடாக மாற்றி, ஓர் எழில்மிகு ஆஸ்ரமம் அமைத்து அங்கு ஓஷோவை இருக்கச் செய்தார்கள். அவர் உடல் நலமும் தேறியது. அதற்கு ‘ரஜனீஷ்புரம்’ என்று பெயர் சூட்டினர்.

அது ஓர் ஆஸ்ரமம் மட்டுமல்ல; சுமார் 5000 பேர் சாப்பிடக் கூடிய அளவுக்கு ஒரு விவசாய மற்றும் பால் பண்ணையும் கொண்டது. பலவிதங்களிலும் தன்னிறைவு கொண்டது. இதைப்போல ஆஸ்ரமங்கள் மற்ற மேற்கத்திய நாடுகளிலும் ஜப்பானிலும் தோன்ற ஆரம்பித்தன.

இப்பொழுது ஓஷோ அவர்கள் ஒரு மதத்தலைவர் என்று அமெரிக்கக் குடியுரிமை கேட்டார். ஆனால் அது மறுக்கப் பட்டது. அதற்கு முக்கிய காரணம் ஓரிகான் அரசாங்கமும் கிறிஸ்துவ அமைப்புகளுமே. இவரின் வளர்ச்சியைக் கண்டு அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். அதனால் பலவித பொய்யான குற்றங்களைச் சுமத்தினார்கள்.

1985 – செப்டம்பர் 5–ஆம் தேதி ஓஷோவின் அந்தரங்கக் காரிய தரிசியும் மற்றும் நிர்வாகக் குழு அங்கத்தினர்களும் சில சட்ட விரோதக் காரியங்களைச் செய்து அது வெளியே தெரியும் நிலையில் திடீரென்று ஆஸ்ரமத்தை விட்டுச் சென்றனர். இதன் விஷயம், ஓஷோவுக்குத் தெரிய வந்ததும் உரிய அரசாங்க அதிகாரிகளைக் கூப்பிட்டு தணிக்கை செய்யச் சொன்னார். அப்பொழுது பல முறைகேடுகள் நடந்திருப்பது தெரிய வந்தது.

இதனால் அரசாங்கம், ஓஷோவும் அதற்கு பொறுப்பு என்று சொல்லி அவரை எந்த வாரண்டும் இல்லாமல் அக்டோபர் 29ஆம் தேதி கைது செய்தது. அவரை ரகசியமாக ஒக்கலஹமா (OKALAHOMA) ஜெயிலில் 4 நாட்கள் பல தொற்று

வியாதி கைதிகளுடன் டேவிட் வாஷிங்டன் (David Washington) என்ற பெயரில் அடைத்து வைத்தனர். பிறகு வேறு சிறையில் மாற்றப்பட்டு மேலும் 12 நாட்கள் கை விலங்கோடு வைத்தனர்.

நவம்பர் மாதம், அவருடைய வக்கீல்கள், அவர் மேல் சுமத்திய 34 குற்றச்சாட்டுகளில், இரண்டையாவது ஒத்துக்கொண்டால், அவருடைய உயிருக்கு ஆபத்து இருக்காது என்று மன்றாடினார்கள். சீடர்கள் பலரும் தொழுது கெஞ்சினார்கள். வேறு வழி இல்லாமல் தன் அன்பு சீடர்களுக்காக அந்த இரண்டு குற்றங்களை ஒத்துக்கொண்டு தன்னுடைய கவனத்துக்கு வராமல் அவை நடந்துவிட்டன என்றார்.

அதற்காக அவர் ஒரு லட்சம் டாலர் அபராதம் கட்டி அமெரிக்காவை விட்டு உடனே கிளம்பி விட வேண்டும் என்று தீர்ப்பளிக்க வைத்தது அமெரிக்க அரசாங்கம். ஆகவே அந்தப் பணத்தை சீடர்கள் சேர்ந்து கட்டி அவரை தனி விமானத்தில் இந்தியாவுக்கு அனுப்பி வைத்தனர். அவர் சிறிது நாட்கள் இமயமலை பக்கம் தங்கினார். அவர் வந்த ஒரே வாரத்தில் அந்த அமெரிக்க ஆஸ்ரமம் கலைக்கப்பட்டது.

1985 – டிசம்பர் மாதம் அவரும் அவருடைய முக்கிய சீடர்களும் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும் என்று எந்தக் காரணமும் சொல்லாமல் இந்திய அரசாங்கம் அறிவித்தது. பிறகு அவர் காட்மாண்டு நேபாளத்துக்குச் சென்று தன் உரைகளை நிகழ்த்தினார்.

1986 – பிப்ரவரி மாதம் 30 நாள் சுற்றுலா விசாவில் கிரீஸுக்குச் (Greece) சென்றார். ஆனால், பழைய கிறிஸ்துவ மத அமைப்புகள், ஓஷோவை உடனே விரட்டாவிட்டால் இரத்த ஆறு ஓடும் என்று அந்த அரசாங்கத்தை பயமுறுத்தவே அவர் வேறு நாட்டிற்குச் செல்ல வேண்டியதாகிவிட்டது.



1986 – மார்ச் 6ஆம் தேதி முதல் சுவிட்சர்லேண்ட் (Switzerland) பிறகு சுவீடன், பிறகு இங்கிலாந்து, அடுத்து ஐர்லேண்டு (Ireland) ஜெர்மனி என்று ஒவ்வொரு நாடாகச் சென்றார். ஆனால், அமெரிக்க அரசாங்கத்தின் கெடுபிடிக்கு அவர்கள் பணிய வேண்டியதாகிவிட்டது.

ஏனெனில் எல்லா நாடுகளும், அமெரிக்க அரசாங்கத்திடம் பல சலுகைகள் பெற்று வந்தன. அவை பறிக்கப்படும் என்று பயமுறுத்தவே, ஓஷோவை எந்த நாடும் அனுமதிக்கவில்லை.

1986 – மார்ச் 19ஆம் தேதி உருகுவே (Uruguay) நாடு மட்டும் அவரை தைரியமாக அனுமதிக்க விரும்பியது. பிற்பாடு அதுவும் மிரட்டப்படவே, ஜூன் மாதம் 18ஆம் தேதி அந்த நாட்டைத் தொட்ட உடனேயே அமெரிக்காவின் உத்தரவின் பேரில் அவர் விசா மறுக்கப்பட்டது. பிறகு லிஸ்பன் (Lisbon) சென்றார். அங்கேயும் அதே தொல்லை.

ஆகவே ஜூலை 28ஆம் தேதி இந்தியா திரும்ப எண்ணினார். இப்படியாக மொத்தம் 21 நாடுகள் அமெரிக்க அரசாங்கத்தின் அச்சுறுத்தலால், அவரை உள்ளே விட மறுத்தன.

1986 – ஜூலை 29ஆம் தேதி மீண்டும் இந்தியா வந்து, பம்பாயில் ஒரு சிநேகிதர் வீட்டில் சுமார் ஆறு மாதம் தங்கி, காலை– மாலை தினசரி உரை நிகழ்த்தினார்.

1987 – ஜனவரி 4ஆம் தேதி பூனா ஆஸ்ரமத்துக்கு மீண்டும் சென்று தங்கினார். ஆனால் பூனா நகராட்சி இவர் இங்கு தங்கக் கூடாது, அதனால் நகரத்தில் பெரிய கலவரம் நேரிடும் என்று கோர்ட் மூலமாக தடை விதித்தது.

ஆனால் பம்பாய் கோர்ட் பிறகு இந்தத் தடையை அகற்றியது. இந்த சமயத்தில் அவர் உரை ஆற்றும்பொழுது, ஓர் இந்து வெறியன் அவரைக் கொலை செய்ய முயன்றான்.

1987 – நவம்பர் மாதம் 6ஆம் தேதி முதல் நோய்வாய்ப்பட்டு சுமார் ஒன்றரை மாதம் படுக்கையில் இருந்தார். அப்பொழுது அவர் உடலை பரிசோதனை பண்ணும்பொழுது அவர் உடலில் தாலியம் (Thallium) விஷம் கலக்கப்பட்டு இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அவர் 12 நாள் சிறை வாசத்தில் இருக்கும்பொழுது அமெரிக்க அரசாங்கம் அவர் உடலில் சிறுகச் சிறுக அந்த விஷத்தைக் கலக்க ரகசிய உத்தர விட்டுள்ளது!

பல சிகிச்சைகள் அளிக்கப்பட்டன. நரம்பு வலியால் அவதிப்பட்டார். எல்லாம் ஓரளவுதான் பயன் கொடுத்தன. இந்த நிலையிலும் அவர் கூடியவரை சீடர்களைச் சந்தித்தார். காலை உரை நிகழ்த்தினார். பிறகு முழு ஓய்வில் இருந்தார்.

1990 – ஜனவரி 19–ஆம் தேதி தன் பூத உடலை நீத்தார். அன்றே அவர் உடலுக்குத் தீயிடப்பட்டது. சுற்றிலும் அவரது சீடர்கள் அனைவரும் ஆடிப்பாடி, அதை ஒரு கோலாகலமாகக் கொண்டாடினார்கள்.







# 1
# இறப்பதும் ஒரு கலையே!

## The Art of Dying

வாழ்வு, வாழ்வதில்தான் இருக்கிறது. அது ஒரு நிலைபெற்ற பொருள் அல்ல. அது ஒரு தொடர்ச்சியான நிகழ்ச்சியாகும். அதை முழுமையாக உணர்வதற்கு, அதனுடன் இரண்டறக் கலந்து இயைந்து வாழ்வதைத் தவிர வேறு வழி இல்லை.

சாஸ்திரங்களிலேயோ அல்லது தத்துவ நூல்களிலேயோ வாழ்வின் உண்மையான அர்த்தத்தைத் தேடினால் வாழ்க்கையை மட்டுமின்றி, அதன் உண்மையான அர்த்தத்தையும் இழக்க நேரிடும்.

எங்கேயோ ஓர் இடத்தில் வாழ்வு உனக்காக காத்துக் கொண்டிருக்கிறது என்று எண்ண வேண்டாம்.

அது உன் உள்ளேயே நிகழும் ஓர் உன்னத நிகழ்ச்சியாகும். அது எதிர்காலத்தில் அடையக்கூடிய ஓர் குறிக்கோள் அல்ல. அது இப்பொழுதே இந்த கணத்தில் இங்கேயே உன்னுடைய இரத்த ஓட்டத்திலேயே, ஒவ்வொரு மூச்சிலேயும், இதயத் துடிப்பிலேயும் நிகழ்ந்துகொண்டு இருக்கிறது.

உன்னுடைய வாழ்க்கை எப்படி அமைந்த போதிலும் நீ அதனுடைய உண்மையான அர்த்தத்தை வேறு எங்கேயோ தேட முயற்சித்தால் அதை கண்டிப்பாக இழப்பாய். பல நூற்றாண்டுகளாக மனிதன் இதைத்தான் செய்துகொண்டு வந்திருக்கிறான்.

வாழ்வைப் பற்றிய கொள்கைகளும், விளக்கங்களும் மிக முக்கியமாக்கப்பட்டுள்ளன. ஆனால் அதனுடைய உண்மை நிலை முழுதுமாக மறக்கப்பட்டுவிட்டது.

நாம் நம் பகுத்தறிவைக்கொண்டு இவ்வுலகத்தை மட்டும் அறிய விரும்புகிறோம். ஆனால் அதைக் கொண்டு இப்பொழுது இந்த கணம் உன்னுள் என்ன நிகழ்ந்து கொண்டு இருக்கிறது என்பதை அறிய விரும்பவில்லை.

நான் ஓர் அழகான கதையைக் கேட்டிருக்கிறேன். சில ஆண்டுகளுக்கு முன் வாழ்வில் பல துறைகளில் வெற்றி அடைந்த ஓர் அமெரிக்கனுக்கு, ஒரு முக்கிய தன்-விளக்கப் பிரச்சினை எழுந்தது. அதாவது, வாழ்வின் உண்மையான அர்த்தம் என்ன என்பதே அவனது பிரச்சினை.

அதைத் தெரிந்துகொள்ளுவதற்காக மனோதத்துவர்கள் முதல் பல பேர்களிடம் விளக்கம் கேட்டான். ஆனால் ஒருவரும் சரியாக சொல்லவில்லை.

பிறகு இமயமலையில் ஓர் கஷ்டமான இடத்தில் ஒரு விளக்கம் பெற்ற ஞானி இருக்கிறார் என்றும், அவரிடம் கேட்டால் உண்மையான அர்த்தம் விளங்கும் என்றும் அறிந்துகொள்கிறான்.



வாழ்வின் உண்மையான விளக்கமும், அதில் தன்னுடைய பங்கு என்ன என்பதும், அந்த ஞானிதான் சொல்ல முடியும் என்று நம்புகிறான்.

ஆகவே, சகல சொத்துக்களையும் விற்றுவிட்டு, அந்த எல்லாம் அறிந்த ஞானியைத் தேடி வருகிறான். சுமார் எட்டு வருட காலம் கிராமம் கிராமமாக இமய மலையில் சுற்றி தேடி அலைகிறான்.

கடைசியில் அவர் எங்கு இருக்கிறார், அந்த இடத்தை எப்படி அடைய முடியும் என்று விளக்கமாக ஓர் இடையன் சொல்லுகிறான்.

சுமார் ஒரு வருடம் அலைந்த பிறகு அவர் இருப்பிடத்தை அடைகிறான். அவருக்கு சுமார் நூறு வயதுக்கு மேல் இருக்கும். தன்னைக் காண அந்த அமெரிக்கன் எவ்வளவு சிரமப்பட்டு, எவ்வளவு தியாகம் செய்து வந்திருக்கிறான் என்று அறிந்த அந்த குரு, அவனுக்கு அன்புடன் உதவி செய்ய சம்மதித்து, "மகனே! நான் உனக்கு எப்படி உதவ வேண்டும்?" என்று கேட்கிறார்.

அதற்கு அவன், "வாழ்வின் உண்மையான தன்மையை எனக்கு விளக்க வேண்டும்" என்று கேட்கிறான். இதற்கு அவர், எந்தவித தடுமாற்றமும் இல்லாமல், "வாழ்வு ஓர் முடிவில்லாத ஆறு போன்றது" என்கிறார்.

இதைக்கேட்ட அந்த அமெரிக்கன், "முடிவில்லாத ஆறா!" எனறு ஆச்சரியப்படுகிறான். "இதை அறிந்து கொள்ளவா இவ்வளவு தூரம் கஷ்டப்பட்டு வந்தேன்?" என்கிறான்.

இதைக்கேட்ட அந்த குரு, மிகவும் அதிர்ச்சியும், கோபமும் அடைந்து, "என்ன, நீ இல்லை என்றா சொல்கிறாய்?" என்றார்.

உன்னுடைய வாழ்வின் விளக்கத்தை வேறு யாரும் கொடுக்க முடியாது. அது உன்னுடைய வாழ்க்கை. அதனுடைய அர்த்தத்தை நீயேதான் தெரிந்துகொள்ள வேண்டும்.

இமயமலை உனக்கு எந்த உதவியும் செய்யாது. உன்னைத் தவிர வேறு யாரும் அதன் அர்த்தத்தை நெருங்க முடியாது. அது உன்னுடைய வாழ்க்கை. அதை உன்னால் தான் நெருங்கிப் புரிந்துகொள்ள முடியும். நீ உண்மையாக வாழ்வதன் மூலமாகத்தான், வாழ்வின் புதிர் உனக்கு விளக்கமாகும்.

முதலில் நான் உனக்குச் சொல்ல விரும்புவது என்னவென்றால் வாழ்வின் அர்த்தத்தை எங்கேயும் சென்று தேடாதே. அதை என்னிடமோ, வேறு சாஸ்திரங்களிலேயோ அல்லது எந்த ஒரு புத்திசாலித் தனமான விளக்கத்திலேயோ தேட முயற்சி செய்யாதே.

இவை எதுவும் அதை விளக்க முடியாது. உன்னுடைய வெறுமையான மனதில் பல விஷயங்களைப் போட்டு நிரப்ப மட்டுமே உதவக்கூடியவை. வாழ்வின் விழிப்புணர்வை அவற்றில் ஒன்றுகூட தரமுடியாது.

உன்னுடைட மனம் எவ்வளவுக்கெவ்வளவு உயிரில்லாத விஷய ஞானங்களால் நிரப்பப்படுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு நீ முட்டாளாகவும், மந்த புத்தி உள்ளவனாகவும் ஆகிவிடுவாய். விஷய ஞானம், ஒருவனை முட்டாளாக்கு கிறது. அவனுடைய உணர்வை மழுங்கடிக்கிறது. அவனது



மனதை தேவையற்ற விஷயங்களால் நிரப்பி, அதன் பளுவை அதிகரிக்கிறது.

அதனால் அவனுடைய அகங்காரம் (ஈகோ) வலுவடைகிறது. ஆகவே அவை வாழ்வின் உண்மை அர்த்தத்தையோ அல்லது அதை அடையக்கூடிய வழியையோ விளக்காது. ஏனெனில், அவற்றினால் அது முடியாது.

'வாழ்வு' என்பது உள்ளே கொப்பளித்துக்கொண்டு இருக்கிறது. அதை நீ அங்கு மட்டும்தான் சந்திக்க இயலும். அருகில் இருக்கும் கோயில் வெளியில் கிடையாது. நீதான் அதன் கோயில். அதன் இருப்பிடம்.

ஆகவே வாழ்வு என்ன என்பதை தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் முதலில் நீ ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது; உன்னையன்றி, வேறு எங்கேயும் தேடாதே என்பதுதான். வேறு எவரிடமும் அதைக் கண்டுபிடிக்க முயலாதே, அதனுடைய உண்மையான அர்த்தம் அவர்களிடமிருந்து உன்னை வந்து அடையாது.

வாழ்வைப் பற்றி, எந்த ஓர் உண்மையான ஞானியும், எதையும் சொல்லவில்லை. ஆனால், அவர்களெல்லாம், உன்னையே, உன்னுள் திருப்பி விட்டிருக்கிறார்கள். அவ்வளவுதான்.

இரண்டாவதாக நீ ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது: வாழ்வு என்ன என்பது தெரிந்திருந்தால்தான் சாவு என்ன என்பது உனக்குப் புரியும். வாழ்வு என்னும் தொடர் நிகழ்ச்சியில் சாவு ஒரு பகுதியே. சாதாரணமாக சாவு என்பது வாழ்வின் முடிவு என்றும், எதிரி என்றும் நாம் எண்ணி வருந்துகிறோம்.

உண்மையிலேயே சாவு என்பது வாழ்வின் எதிரி அல்ல. வாழ்விற்கு எதிரி, சாவுதான் என்று கருதினால் அதன் உண்மையான அர்த்தத்தை நீ அறிந்திருக்கவில்லை என்பதையே காட்டும்.

வாழ்வும், சாவும் ஒரே சக்தியின், ஒரே நிகழ்ச்சியின் இரு முனைகள். அவை கடல் அலையின் மேடு பள்ளம் போலவும், நாளின் பகல், இரவு போலவும், ஆண்டின் குளிர் காலம், வசந்த காலம் போலவும் விளங்குகின்றன.

அவை ஒன்றுக்கொன்று பகையாகவோ தனித்தனியாகவோ அல்லது எதிர் எதிராகவோ இல்லை. ஆனால் அவை ஒன்றை ஒன்று சார்ந்து செயல்படுகின்றன. அனுசரித்து இயங்குகின்றன. வாழ்வின் முடிவு சாவில் இல்லை.

உண்மையில் ஓர் முழுமையான வாழ்வின் உச்சகட்டமே இறப்பு ஆகும். வாழ்வின் இடைவிடாத தன்மையை நீ புரிந்துகொண்டால் மட்டுமே சாவின் உண்மைத் தன்மையை அறிய முடியும்.

வாழ்வின் உயிரோட்டமான ஓர் அங்கமே சாவு ஆகும். அது வாழ்வின் நண்பனே தவிர, எதிரி அல்ல. சாவு இல்லாமல் வாழ்வு இருக்க முடியாது. சாவின் மேல்தான் வாழ்வு அமர்ந்திருக்கிறது. அது வாழ்வின் ஒரு நிகழ்ச்சியின் முடிவில் நேருவதாகும்.

ஒவ்வொரு நொடியிலும், வாழ்வைப் போலவே சாவும் நிகழ்கிறது. நீ விடும் ஒவ்வொரு மூச்சிலேயும் வாழ்வும் நிகழ்ந்து கொண்டு இருக்கிறது. ஆகவேதான் ஒரு குழந்தை பிறந்தவுடன் அது தன் வாழ்வை ஆரம்பிக்க மூச்சை முதலில் தன் உள்ளே இழுக்கிறது. அதேபோல் ஒரு வயோதிகன் தான் இறக்கும் பொழுது, தன் கடைசி மூச்சை வெளியே விடுகிறான்.



ஒரு வண்டியின் இரு சக்கரங்களைப் போல மூச்சை உள் இழுப்பது வாழ்வாகவும், அதேபோல அதை வெளியே விடுவது சாவாகவும் இருக்கின்றன. மூச்சை எந்த அளவு வெளியே செலுத்தி நீ இறக்கிறாயோ, அதே அளவு நீ மூச்சை உள்ளே இழுக்கும்போது வாழ்கிறாய்.

மூச்சை நீ உள்ளே இழுப்பது என்பது அதை வெளியே செலுத்துவதன் தொடர்ச்சியே தவிர வேறில்லை. வாழ்வின் இன்னொரு அங்கமே சாவாகும்.

மூச்சை நீ வெளியே தள்ளாமல் உள்ளே வைத்திருக்க முடியாது. அதேபோல் நீ இறக்காமல் வாழவே முடியாது. வாழ்வை முழுமையாக அறிந்தவன் தான் சாவை முழுமையாக அனுமதிப்பான். வரவேற்பான். ஒவ்வொரு நொடியிலும் அவன் இறந்து மீண்டும் மலர்கிறான்.

அவன் இறந்து அடுத்து மலர்வது என்பது ஒரு தொடரான நிகழ்ச்சியே தவிர வேறில்லை. இறப்பது என்பது இறந்தகாலம். பிறப்பது என்பது வருங்காலம்.

வாழ்வின் அர்த்தத்தை நீ அறிய முற்பட்டால் சாவு என்ன என்பது பற்றியும் நீ அறிந்துகொள்ள முடியும். அதேபோல், சாவைப் பற்றி நீ அறிய முயன்றால் வாழ்வு என்ன என்பது புரியும். இரண்டின் உயிரோட்டமும் ஒன்றே.

சாதாரணமாக சாவைப் பற்றிய பயத்தால் வாழ்விலிருந்து சாவை பிரித்து வைத்திருக்கிறோம். வாழ்வு நமக்கு நன்மையைக் கொடுப்பது என்றும், சாவு துன்பத்தைக் கொடுப்பது என்றும் எண்ணி வருகிறோம்.

ஆகவே வாழ்வை நாம் நேசிக்க வேண்டும் என்றும், சாவைக் கண்டு விலக வேண்டும் என்றும் கருதுகிறோம். சாவை நெருங்காதவாறு நம்மை நாம் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்கிறோம். இதைப்போன்ற முட்டாள் தனமான எண்ணங்களினால் நம் வாழ்வில் முடிவில்லாத துயரத்தை ஏற்படுத்திக் கொள்ளுகிறோம்.

ஏனெனில் ஒருவன் தன்னை சாவிலிருந்து காப்பாற்றிக் கொள்ள முயலும்போது, வாழ்க்கையை வாழ்வதற்கே தகுதி இல்லாதவனாக ஆகிவிடுகிறான். இப்படிப் பட்டவர்களே மூச்சை வெளியே விடுவதற்குப் பயப்படுகிறவர்கள். இவர்களே மூச்சை உள்ளேயும் இழுக்க முடியாமல் தவிப்பவர்கள்.

வாழ்வு என்பது நீரோட்டம் போன்று ஒரு தொடர் நிகழ்ச்சி. மேற்கண்டவர்களின் வாழ்வு சீராகவும் முழுமையாகவும் இருக்காது. இழுபறியாகவே நடக்கும். அதில் இயற்கையான நீரோட்டம் இருக்காது.

நீ உண்மையிலேயே வாழ விரும்பினால், சாவதற்கும் தயாராக இருக்க வேண்டும். உன்னிடத்தில் உள்ள எது சாவைக் கண்டு பயப்படுகிறது? உன் வாழ்வு சாவைக் கண்டு பயப்படுகிறதா? அப்படி இருக்க முடியாது.

ஏனெனில் வாழ்வு தன்னுடைய மறு அங்கமாகிய சாவைக் கண்டு எப்படிப் பயப்பட முடியும்? உன்னிடம் உள்ள ஏதோ ஒன்றுதான் சாவைக் கண்டு பயப்படுகிறது. உன்னிடத்தில் உள்ள அகங்காரம் (ஈகோ) தான் சாவைக் கண்டு பயப்படுகிறது.

வாழ்வும் சாவும் எதிரிகள் இல்லை. ஆனால் 'நான்' என்னும் அகங்காரமும் சாவும் ஒன்றுக்கொன்று



எதிரிகள். ஆகவே வாழ்வதற்கும், சாவுக்கும் அகங்காரமே (ஈகோ) எதிரி.

இந்த அகங்காரம் சாவதற்குப் பயப்படுவதால் வாழ்வதற்கும் பயப்படுகிறது. ஏனெனில் வாழ நினைக்கும் ஒவ்வோர் அடியிலும் சாவும் தொடர்ந்து வந்துகொண்டே இருப்பதே காரணம்.

நீ வாழும்போது சாவை மிகவும் நெருங்கி வருகிறாய். வாழ்வும், சாவும் மிகவும் அருகே இருப்பதால் உன்னுடைய அகங்கார 'நான்' இந்த இரண்டையும் கண்டு பயப்படுகிறது. ஆகவே அது இரண்டையும் தன்னை நெருங்கி விடாமல் தள்ளிக் கொண்டே இருக்கும்.

ஆகவேதான் பெரும்பாலோர் இவ்வுலகத்தில் வாழவும் முடியாமல், சாகவும் முடியாமல் ஏதோ காலத்தைத் தள்ளிக்கொண்டு இருக்கிறார்கள். இது ஓர் மிகவும் மோசமான நிலையாகும்.

ஒரு மனிதன் உண்மையிலேயே நிறைவான வாழ்வு வாழ்ந்தால் அவனுக்கு சாவும் நிறைவு தரும். இதுவே, சிலுவையில் அறையப்பட்ட இயேசுவின் அர்த்தமுள்ள வாழ்வு ஆகும். இயேசு ஏன் சிலுவையை தானே தன் தோளில் சுமந்து சென்றார் என்பதை சுலபமாகப் புரிந்து கொள்ள முடியாது. அவர் தன் சீடர்களிடம், "உங்களது சிலுவைகளை நீங்கள்தானே சுமக்க வேண்டும்" என்றார்.

இயேசு தன் சிலுவையைத் தானே சுமந்து சென்றதன் அர்த்தம் என்னவென்றால், ஒவ்வொருவரும் தன்னுடைய சாவை எப்பொழுதும் சுமந்துகொண்டே இருக்க வேண்டும். ஒவ்வொரு நொடியிலும் சாவை சந்தித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

அவர்கள் எப்பொழுதும் சிலுவையின் மீதே இருக்க வேண்டும் என்பதே. ஏனெனில் அது ஒன்றுதான் வாழ்வை முழுவதுமாக நிறைவாக வாழ்வதற்கு வழி வகுப்பது ஆகும்.

என்னிடம் வரும் பெரும்பான்மையினர், "நாங்கள் அன்பு செலுத்தப் பயப்படுகிறோம்" என்று சொல்லி என்னை வியப்பில் ஆழ்த்துகிறார்கள். எதற்காக அவர்கள் அன்பைக் கண்டு பயப்பட வேண்டும்? ஏனென்றால் நீ உண்மையிலேயே யாரையாவது நேசிக்கும்பொழுது Ego (ஈகோ) உன்னை விட்டு நீங்க ஆரம்பிக்கிறது. தன் நிலையை இழக்க ஆரம்பிக்கிறது. அகங்காரத்துடன் ஒருவன் பிறரிடம் அன்பு செலுத்த முடியாது.

அன்பு செலுத்துவதற்கு அது எப்பொழுதும் ஒரு தடையாகவே இருக்கும். இந்த அகங்காரத் தடையை நீ எப்பொழுதாவது விட முயற்சி செய்யும்பொழுது அது "இந்த முயற்சி உன்னை மரணத்திற்குத்தான் கொண்டு செல்லும், ஜாக்கிரதை" என்று எச்சரிக்கும்.

உன்னுடைய அகங்காரத்தின் இறப்பு, உன்னுடைய இறப்பு இல்லை. அதனுடைய மரணம் என்பது உண்மையிலேயே உன்னுடைய வாழ்வின் திறவுகோலே. இந்த அகங்காரம் ஓர் உயிரற்ற சுவர்போல் உன்னுடைய உண்மையான 'நீ'யைச் சுற்றி மூடிக்கொண்டிருக்கும். அதை உடைத்து வெளியே தூக்கி எறிய வேண்டும்.

ஒருவன், வெளியே செல்லும்பொழுது எப்படி தூசுகள் அவன் உடையிலும், உடலிலும் படிகிறதோ அதைப்போல நீ வாழ்க்கையில் நகர்ந்து செல்லும்பொழுது இந்த அகங்காரம் இயற்கையாகவே உன்னிடம் வந்து ஒட்டிக்கொள்ளும்.



உடலில் படிந்த அழுக்கை எப்படி குளித்து போக்கிக் கொள்கிறோமோ அதைப்போல மனதில் படிந்த இந்த அகங்கார அழுக்கையும் போக்க வேண்டும்.

வாழ்க்கையை நாம் கடக்கும்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக இறந்தகால அனுபவங்கள், விஷய ஞானங்கள் அழுக்காக நம் மனதில் படிகின்றன. இந்த அழுக்கு மூட்டையே நம்முடைய கர்வமும், தன் முனைப்பு அகங்காரமும். இது நாளடைவில் நம்மைச் சுற்றி ஒரு தடுப்புச் சுவர்போல் ஆகிவிடுகிறது. இதை முதலில் உடைத்து வெளியே தூக்கி எறிய வேண்டும்.

இதை நீக்குவதற்கு ஒருவன் தினமும் ஏன், ஒவ்வொரு நொடியிலும் இடைவிடாமல் குளித்து வரவேண்டும். அப்பொழுதுதான் அது நம்மை சிறைப்படுத்தாது. உண்மையாக அன்பு செலுத்தும்பொழுது வாழ்வு தன் உச்சிக்கே போய்விடுவதால் இந்த அகங்காரம் அன்பைக் கண்டு பயப்படுகிறது. ஆனால் வாழ்வின் உச்சநிலை நேரிடும்பொழுது அங்கு சாவின் உச்ச நிலையும் சேர்ந்தே தான் இருக்கும் என்பதை நாம் அறிய வேண்டும்.

அன்பு செலுத்தும்பொழுது நீ இறந்து மறுபடியும் பிறக்கிறாய். நீ தவம் செய்யும்பொழுதும் பிரார்த்தனை செய்யும்பொழுதும் அல்லது அகங்காரத்தை உன் குருவிடம் சரணாகதியாக்கிக் கொடுக்கும்போதும் மேற்சொன்ன நிகழ்ச்சிகள் நடக்கும்.

ஆகவே உன்னை சரணாகதி செய்யாதவாறு இந்த அகங்காரம், தன் பகுத்தறிவைப் பயன்படுத்தி பலவாறாகத் தடுக்கப் போகிறாய். அது "இதை நீ நன்றாக யோசி, நன்றாக விசாரி, புத்திசாலித்தனமாக நடந்து கொள்" என்று பலவாறாகப் போதனை செய்யும்.

அதேபோல, குருவை நீ அணுகும்போது இது மறுபடியும் நம்ப மறுக்கும். சந்தேகப்படும். உன்னுள் ஒரு போராட்டத்தையே உருவாக்கும். ஏனெனில் நீ மறுபடியும் வாழ்வின் அருகில் வருகிறாய். குரு என்னும் நெருப்பின் அருகில் வருகிறாய். அங்கு, வாழ்வு எந்த அளவில் வாழுகிறதோ அதே தன்மையில் சாவும் உயிரோட்டமாக நிகழ்கிறது.

வாழ்வும் சாவும் ஒன்றாகவே உன்னுள் சுடராக எரிந்து கொண்டிருக்கிறது என்பதை நீ எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவை ஒருபோதும் தனியாக இருப்பதில்லை. வாழ்வை நீ மிகவும் குறைந்த அளவில், குறைந்த தன்மையில் அனுபவிக்கும்பொழுது, வாழ்வும், சாவும் தனித்தனியாகவே இயங்குவதை உணர முடியும்.

நீ, வாழ்வின் உச்சியை நெருங்கும்பொழுது, சாவின் உச்சத்தன்மையுடன் நெருங்கி வருவதை உணர முடியும். அன்பு செலுத்தும்பொழுதும், தவம் செய்யும்பொழுதும் பூரண நம்பிக்கை குருவிடம் வைக்கும்பொழுதும், பிரார்த்தனை செய்யும்பொழுதும், தவம் செய்யும் பொழுதும், எங்கெங்கு வாழ்வு முழுமையை அடைகிறதோ, சாவும் முழுமையாக அதே இடத்தில் இருக்கும். சாவு இல்லாமல் வாழ்வு பூரணத்துவம் அடைய முடியாது.

ஆனால், 'தான்' என்னும் அகங்காரம், பிரித்து ஆள்வதிலும் இரண்டாக இருப்பதிலேயும்தான் எப்பொழுதும் குறியாக இருக்கிறது. ஆனால் இந்த இரண்டையும் பிரிக்க முடியாது. நீ குழந்தையிலிருந்து வாலிபனாகிறாய். ஆனால், எப்பொழுது வாலிபத் தன்மையை அடைந்தாய் என்று சரியாகச் சொல்ல முடியுமா?



குழந்தைத் தன்மையிலிருந்து விடுபட்டு, இந்த நேரத்தில் திடீரென்று வாலிபனாக மாறினேன் என்று உன்னால் கோடு கிழித்துச் சொல்ல முடியுமா? அதேபோல ஒருநாள் நீ கிழவனாகப் போகிறாய். நீ எந்த கட்டத்தில், கிழவனாகப் போகிறாய் என்று உறுதியாகச் சொல்ல முடியுமா?

வாழ்வின் தொடரை, கோடு போட்டுக் காட்ட முடியாது. நீ பிறக்கும்பொழுது இதுதான் நேரிடுகிறது. நீ எப்பொழுது பிறந்தாய் என்று கோடிட்டுக் காட்ட முடியுமா? வாழ்வு எப்போது ஆரம்பமாகிறது? அது குழந்தை மூச்சுவிட ஆரம்பிக்கும்பொழுதுதான் ஆரம்பிக்கிறதா? குழந்தை வெளியே வந்ததும், டாக்டர் அதைத் தட்டி மூச்சுவிடப் பண்ணுகிறார்.

ஆகவே அப்பொழுதுதான் அதன் வாழ்வு ஆரம்பமாகிறது என்று நினைக்கலாமா? அல்லது அது தாயின் கர்ப்பப் பையில் நுழையும்பொழுதுதான் ஆரம்பமாகிறது என்று நினைக்கலாமா? குழந்தை உற்பத்தியின் ஆரம்ப கட்டத்தில், வாழ்வு ஆரம்ப மாகிறதா, அல்லது அதற்கு முன்பே இருந்ததா? அப்படி முன்பே என்றால் எப்பொழுது உண்மையாக ஆரம்பமாயிற்று?

ஆரம்பமும், முடிவும் இல்லாததே வாழ்க்கைத் தொடர். அது ஒருபோதும் துவங்கப்படுவதில்லை. ஒரு மனிதன் எப்பொழுது இறக்கிறான்? மூச்சு நிற்கும்பொழுது தான் அவன் இறக்கிறான் என்று சொல்லலாமா?

பல யோகிகள், தக்க விஞ்ஞான ஆதாரத்துடன், தன் மூச்சை சிறிது நேரம் நிறுத்தி, பிறகு உயிர் பெற்று எப்பொழுதும் போல வாழ்கிறார்கள். ஆகவே மூச்சு நிற்பது சாவின் அறிகுறி அல்ல. பின் எங்கே எப்படி வாழ்வு முடிகிறது?

அது எங்கேயும் முடிவடைவது இல்லை. அதுபோல, அது எங்கேயும் ஆரம்பமாவதில்லை. ஒரு சாசுவதமான நிரந்தரமான நிலையில் அதனுடன் நாம் பின்னிப் பிணைந்துக் கொண்டிருக்கிறோம். நாம் இங்கு, இதன் ஆரம்ப காலத்திலேயே இருந்து வந்து இருக்கிறோம்.

ஆகவே, இது முடிவு அடையும் காலம் வரை இருந்தே தீருவோம். உண்மையில் ஆரம்பம் என்றும், முடிவு என்றும் ஒன்றும் இல்லை. நாம்தான் வாழ்வு. உருவங்கள் மாறலாம். உடல் அமைப்புகள் மாறலாம். மனங்கள் மாறலாம். ஆனால் வாழ்வு மாறவே மாறாது.

வாழ்வை நாம் எப்படி புரிந்துகொள்ளுகிறோம் என்றால் அதை நம் உடலோடும் மனதோடும் சம்பந்தப்படுத்தியே பார்க்கிறோம். அதேபோல, இறப்பு என்பதை, இந்த உடலைவிட்டு இந்த உருவத்தை விட்டு, இந்த மனதைவிட்டு செல்லுவதைத் தவிர வேறில்லை என்று நினைக்கிறோம்.

நீ உன் வீட்டை மாற்றுகிறாய் என்று வைத்துக்கொள். நீ, இந்த வீட்டோடு மிகவும் நெருக்கமாக, இணைத்துக் கொண்டிருந்தால் அடுத்த வீட்டுக்குச் செல்லும்பொழுது மிகவும் துன்பம் அடைவாய். நீ இறந்துவிடுவது போல் உணர்வாய்.

நீ அந்த பழைய வீட்டில் சில காலம் வசித்த காரணத்தால், அதுதான் உன் நிரந்தர இருப்பிடம் என்று கருதி இருக்கிறாய். ஆனால் வாழ்வு என்பது நிரந்தர மானது. வீடு என்பது நிரந்தரமில்லாத ஒரு புறச்சொத்து என்ற விழிப்புணர்வு ஏற்பட்டிருந்தால் இந்தத் துன்பம் நேரிட்டிருக்காது.



யாரெல்லாம் தன்னைத் தானே உற்று நோக்கு கிறார்களோ, யாரெல்லாம் தான் யார் என்பதை அறிய முற்படுகிறார்களோ, அவர்களெல்லாம் வாழ்வு என்பது நிரந்தரமானது, ஆரம்பம் - முடிவு இல்லாத ஒரு தொடர் என்று புரிந்து கொள்ளுவார்கள்.

வாழ்வு என்பது காலத்திற்கு உட்பட்டதல்ல; காலத்தைக் கடந்து செயல்படுவது. அதில் சாவு என்பதும் ஒரு பகுதியாகச் செயல்படுகிறது.

வாழ்வைப் போல், சாவும் திரும்பத் திரும்ப நேரிடும் ஒரு தொடர் நிகழ்ச்சிதான். இது வாழ்வை மீண்டும் மீண்டும் மலரச் செய்து, புதுமையாக்குகிறது.

பழைய உருவத்திலிருந்து பழைய சிதைந்த கட்டடத்திலிருந்து வெளியேறி, வாழ்வுக்கு ஒரு புத்துணர்ச்சியையும், இளமையையும், வீரியத்தையும் கொடுத்து, அதற்கு உதவியாக இருக்கிறது.

நான் ஒரு கதை கேட்டிருக்கிறேன். மவுண்ட் வெர்னானுக்குப் (Mount Vernon) பக்கத்தில், ஒரு பழைய பொருள்களை விற்கும் கடையில் ஒருவன் மிகப் பழைய கலப்பை ஒன்றை பார்க்கிறான். அந்தக் கடைக்காரனிடம், "அந்த பிரம்மாண்டமான பழைய கலப்பையைப் பற்றிச் சொல்லுங்கள்" என்று கேட்கிறான்.

அதற்கு அந்தக் கடைக்காரன், "இது ஒரு காலத்தில் ஜார்ஜ் வாஷிங்டனுக்குச் சொந்தமானது" என்கிறான்.

"அப்படியா, உண்மையிலேயே இது கம்பீரமாகவும், புதுமையாகவும் இருக்கிறது" என்று சொல்லுகிறான்.

அதற்கு அந்தக் கடைக்காரன், "உண்மைதான். அது ஏன் என்றால், அதன் கைகள் மூன்று முறையும், தலை இரண்டு தடவையும் மாற்றப்பட்டிருக்கின்றன" என்கிறான்.

இதைப்போலத்தான் வாழ்வும். அது தன்னுடைய கைகளையும், தலையையும் மாற்றிக்கொண்டே இருக்கிறது. இப்படி அது எல்லாவற்றையும் மாற்றிக் கொண்டே இருப்பதுபோல் தோன்றினாலும், அதில் ஏதோ ஒன்று அழிவில்லாமல், மாற்றம் ஏதும் இல்லாமல் இருக்கிறது.

நீங்கள் ஒன்றை கவனியுங்கள்.

ஒரு காலத்தில் நீங்கள் குழந்தையாக இருந்தீர்கள். அப்பொழுது இருந்தத் தன்மையில், இப்பொழுது எது மீதியாக இருக்கிறது? அந்த இளமைக்கால ஞாபகத்தைத் தவிர என்ன இருக்கிறது? உங்கள் உடல் மாறிவிட்டது. உங்கள் மனமும் மாறிவிட்டது. ஏன், உங்கள் உருவமும் மாறிவிட்டது;

எதுவுமே அப்பொழுது இருந்த நிலையில் இப்பொழுது இல்லை. ஆனால் உங்கள் ஞாபகம் மட்டும் அப்படியே இருக்கிறது. இந்த மாற்றம் எப்படி, எந்த கட்டத்தில் நிகழ்ந்தது என்று உங்களால் கோடு போட்டுக் காட்ட முடியுமா? ஏதோ ஒரு கனவு போலவும், எங்கேயோ ஒரு புத்தகத்தில் படித்தது போலவும் அல்லது யாரோ சொன்னது போலவும் இப்பொழுது நீங்கள் உணர்கிறீர்கள் அல்லவா?



இந்த இளமை நினைவுகள் உண்மையிலேயே உங்களுடையவைதானா, அல்லது வேறு ஒருவருடையதா? சில நேரங்களில் உங்களுடைய குழந்தைப் பருவப் புகைப்படங்களைப் பாருங்கள். நன்றாக உற்றுப் பாருங்கள். உங்களால் உண்மையிலேயே அதை நம்ப முடியாது. ஏனெனில் உங்களுடைய உருவம் முழுவதும் மாறிவிட்டிருக்கும். கால் முதல் தலைவரை எல்லாமே மாறிவிட்டதை அறிந்து கொள்வீர்கள்.

ஆயினும் எங்கேயாவது ஓர் ஆழமான இடத்தில் ஏதோ ஒன்று தொடர்ந்து வந்து கொண்டு இருப்பதை உணர்வீர்கள். அது ஒரு சாட்சியாக நின்றுகொண்டு இருப்பதை அறிவீர்கள்.

பார்வைக்குப் புலப்படாத ஒரு மெல்லிய நூல் இழைபோல் அது விளங்கி வருகிறது. உங்களிடம் உள்ள சகலமும் மாறினாலும், அது மட்டும் மாறாமல் இருந்து வருவதை உணர்வீர்கள். அது புரிந்துகொள்ள முடியாத நூல் இழைபோல் விளங்கிவருகிறது.

உங்களிடம் உள்ள சகலமும் மாறினாலும், அது மட்டும் மாறாமல் இருந்து வருவதை உணரலாம். அந்த புரிந்துகொள்ள முடியாத நூல் இழை வாழ்வையும், சாவையும் தாண்டி நிற்கிறது. அந்த காலத்தைக் கடந்தத் தன்மைக்கு வாழ்வும் சாவும் இரண்டு இறக்கைகள் போன்று விளங்குகின்றன.

ஒரு வண்டியின் இரு சக்கரத்தைப் போல அது வாழ்வையும், சாவையும் உபயோகித்துக் கொள்கிறது. இரண்டு சக்கரமும் ஒன்றை ஒன்று அனுசரித்துச் செல்கிறது. மூச்சை விடுதல் - இழுத்தல் போல வாழ்வும் சாவும் அதனுடைய இடைவிடாத நிகழ்ச்சிகளே! எது உங்களது

அனுபவங்கள் அனைத்தையும் கடந்து நிற்கிறதோ, அதுதான் உங்களுடைய உண்மையான 'நீ'.

ஆனால் நாம் நம் உடலோடு மிகவும் பற்று கொண்டு இருப்பதால் இந்த உடல்தான் 'நாம்' என்று எண்ணுகிறோம். இதுவே நமக்குக் கர்வத்தையும், 'தான்' என்ற அகங்காரத்தையும் உண்டாக்குகிறது. இதைத்தான் நாம் 'நான்' என்று அழைக்கிறோம்.

உண்மையில் இந்த பொய்யான 'நான்' பல தடவை இறந்து படவேண்டும். அதனால்தான், அது தொடர்ந்து பயத்திலேயே இருக்கிறது. அது எப்பொழுதும் நடுங்கிக்கொண்டு, அதிர்ச்சியோடு பயந்துகொண்டு தன்னைக் காப்பாற்றிக்கொள்ள எப்பொழுதும் ஜாக்கிரதை உணர்வுடன் செயல்படுகிறது.

ஒரு சூஃபி (Sufi) சந்நியாசி, ஒரு பெரிய பணக்காரனின் வீட்டுக் கதவைத் தட்டுகிறார். அவர் இந்த உலகத்தில் உணவைத் தவிர வேறு எதுவுமே தேவையில்லாத ஒரு பரதேசிதான். ஆனால் அந்தப் பணக்காரன், "உன்னை இங்கு யாருக்குமே தெரியாது" என்று அவரை நோக்கிக் கத்துகிறான். அதற்கு அவர், "ஆனால், எனக்கு நான் யார் என்று தெரியும்" என்கிறார்.

மேலும், "என்னை உனக்கு அறிந்து நான் யார் என்னும் விழிப்புணர்வு எனக்கு ஏற்படாமல் இருந்திருந்தால், அது எவ்வளவு வேதனையாகவும், துக்கமாகவும் இருக்கும்! ஆமாம், நீ சொல்லுவது சரிதான். என்னை இங்கு யாருக்குமே தெரியாது. ஆனால், எனக்கு நான் யார் என்று தெரியும்!" என்று சொல்லிச் சென்றுவிட்டார்.

இரண்டே இரண்டு நிலையில்தான், நீங்கள் இருக்க முடியும். அதில் ஒன்று துக்கமான நிலை. ஆனால், பெரும்பான்மையோர், இந்த நிலையில்தான் இருக்கி றார்கள். உங்களைப்பற்றி 'நீங்கள் யார்?' என்று எல்லாருக் கும் தெரிந்திருக்கலாம்.



ஆனால் உங்களுடைய இயற்கை நிலையை - காலம் கடந்த நிலையை நீங்கள் மறந்திருக்கிறீர்கள். இதுதான் உங்கள் வாழ்க்கையில் நேர்ந்த மோசமான ஓர் துர்ப்பாக்கிய நிலை. நீங்கள் அதை மறந்திருப்பதற்காக, பல காரணங்களை உண்டு பண்ணிக் கூறலாம். ஆனால் வருத்தப்படக்கூடிய உண்மை நிலை என்னவென்றால், "நீங்கள் யார் என்று உங்களுக்கு உண்மையிலேயே தெரியாது என்பதே."

ஒருவன் தான் யார் என்றும், தான் எங்கிருந்து வந்தோம், அடுத்து எங்கே போகிறோம் என்று தெரியாத நிலையில், அவன் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும்? இந்த அடிப்படையான அறியாமையால் அவனுக்கு ஆயிரக்கணக்கான துன்பங்கள் ஏற்படுகின்றன.

அதிகாலைப்பொழுதில், ஓர் எறும்புக்கூட்டம் உணவைத் தேடி தன் இருட்டுப் பொந்திலிருந்து வெளியே வந்தது. காலைப் பனிப் படலத்தால் மூடிய இலைகளை உடைய ஒரு செடியை அவை கடந்து சென்றன. அதில் ஓர் எறும்பு அந்த பனித்துளிகளைக் காட்டி, "இவை என்ன? எங்கிருந்து வந்தவை?" என்று மற்ற எறும்புகளிடம் கேட்டது.

அதற்கு அவற்றில் சில, "அவை பூமியிலிருந்து வந்தவை" என்றும், மற்றும் சில "அவை கடலிலிருந்து வந்தவை" என்றும் கூறின.

"பூமியிலிருந்து வந்தவை" என்ற கோட்பாட்டுக்கு ஒரு பகுதி எறும்பும், மற்றும் "கடலிலிருந்து வந்தவை" என்ற

கொள்கைக்கு மறுபகுதி எறும்பும், இரண்டாகப் பிரிந்து அவற்றுள், "தாங்கள் சொல்லுவதுதான் சரி" என்று சண்டை போட ஆரம்பித்தன.

அறிவும், புத்திசாலித்தனமும் உள்ள ஒரே ஓர் எறும்பு எழுந்து நின்று, "தயவு செய்து உங்கள் சண்டையை நிறுத்தி, நம்மைச் சுற்றிலும் உள்ளவற்றைக் கூர்ந்து நோக்குங்கள். எல்லாமே ஒரே பொருளை நோக்கி ஈர்க்கப்படுவதை அறிவீர்கள். அதேபோல, எல்லாமே, தன் ஆரம்ப நிலையை நோக்கியே திரும்பிச்செல்ல முற்படுகின்றன என்பதையும் அறிவீர்கள்.

நீங்கள் ஆகாயத்தை நோக்கி எவ்வளவு விரைவாக ஒரு கல்லை எறிந்தாலும், அது பிறகு பூமியை நோக்கியே திரும்பி வரும். வெளிச்சத்தை விரும்புபவை அனைத்தும், ஒரு காலத்தில் வெளிச்சமாகவே இருந்தவை என்பதை புரிந்துகொள்ளுவீர்கள்" என்று விளக்கியது.

ஆனால் அந்த எறும்புப் பிரிவுகள், தங்களுக்குள் சமாதானம் அடையாமல், மறுபடியும் சண்டை இட ஆரம்பித்தன.

பிறகு சூரியன் மேலே கிளம்பி வர வர அந்தப் பனித்துளிகள் இலையை விட்டு அகன்று, மெல்ல மெல்ல உயர்ந்து, சூரியனை நோக்கிச் சென்று கடைசியில் அதில் மறைந்தே விடுகின்றன.

ஒவ்வொன்றும், தன் ஆரம்ப நிலைக்கு திரும்பி வந்தே ஆக வேண்டும். அப்படியேதான் நடந்து கொண்டு இருக்கிறது. நீங்கள் வாழ்க்கையைப் புரிந்துகொண்டால், இறப்பையும் புரிந்துகொண்டவர்கள் ஆவீர்கள். தன் ஆதி நிலையை மறப்பதே வாழ்க்கை.



அதேபோல இறப்பு என்பது அதை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்ளுவதாகும். தன் மூல நிலையிலிருந்து விலகிச் செல்லுவதே வாழ்க்கையாகும். அதேபோல அதை நோக்கி மீண்டும் வருவதே இறப்பு ஆகும்.

இறப்பு அருவருப்பானது அல்ல. அது அழகுள்ளது. ஆனால் யார் வாழ்க்கையை அதன் இயல்பாக, தடுத்தல், மாற்றுதல், அடக்குதல் போன்றவை இல்லாமல் வாழ்கிறார்களோ அவர்களுக்குத் தான் மரணம் அழகானது.

வாழ்வை அழகாகவும், தைரியமாகவும் அதன் போக்கிலேயே செல்ல ஆயத்தமானவர்களுக்கும் அந்த முழுமையை விரும்பி அதனுடன் மகிழ்ந்து கொண்டாடுபவர்களுக்கும் அதன் தொடர்பாக வரும் இறப்பு என்பதும் மிக அழகானதுதான்.

உங்களுடைய வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாக இருந்தால், மரணமும் ஒரு கொண்டாட்டமாக ஆகிவிடும். வேறுவிதமாகச் சொல்லுகிறேன். "நீங்கள் எப்படி வாழ்வை வாழ்ந்தீர்கள் என்பதை உங்கள் மரணம் காட்டிக் கொடுத்துவிடும்.

நீங்கள் வாழ்க்கையை துன்பத்தோடு அனுபவித்திருந்தால் மரணமும் உங்களுக்கு துன்பத்தைக் கொடுக்கும். மரணம் ஒரு சிறந்த வெளிப்படுத்துதல் ஆகும். நீங்கள் வாழ்வில் மகிழ்ச்சியோடு இருந்தால் மரணமும் உங்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். நீங்கள் உங்களுடைய உடல் இன்பத்திற்காக, உடல் சௌகரியத்திற்காக மட்டும் வாழ்ந்திருந்தால், மரணம் உங்களுக்குத் துன்பத்தையும், துயரத்தையும்தான்

கொடுக்கும். ஏனெனில் நீங்கள் இன்பம் என்று இதுவரை கருதிய உடல் உங்களை விட்டுச் செல்லத்தான் வேண்டும்.

இந்த உடல் ஓர் தற்காலிகமான தங்குமிடம்தான். இந்த விடுதியில் நாம் இரவில் தங்குகிறோம். காலையில் புறப்பட்டு விடுகிறோம். இது உங்களுடைய நிரந்தர தங்குமிடமில்லை. இது உங்களுடைய வீடு இல்லை."

ஆகவே, நீங்கள் உடலைப்பற்றிய வாழ்க்கையை வாழ்ந்திருந்தால் இந்த உடலுக்கு அப்பால் உள்ள நிலையைப் பற்றி அறிந்துகொள்ளவே முடியாது. அப்பொழுது மரணம் உங்களுக்கு மிக மிக அருவருப்பான தாகவும், துன்பம் தரக்கூடியதாகவே தோன்றும். அது ஒரு வேதனையான அனுபவம்தான்.

ஆனால், நீங்கள் இந்த உடலுக்குச் சற்று மேலே வாழ்ந்திருந்தால், நீங்கள் சங்கீதத்தையும், கவிதையையும் விரும்பி இருந்தால் நீங்கள் மலர்களையும், நட்சத்திரங் களையும் விரும்பி இருந்தால், அல்லது இவற்றைப் போல் உடல் சம்பந்தமில்லாத உணர்வுகளுக்கு ஆட்பட்டிருந் தால் மரணம் உங்களுக்கு மோசமானதாகவும் மிகவும் வேதனை தரக்கூடியதாகவும் இருக்காது.

நீங்கள் அதை வாழ்க்கைக்குச் சமமாக கருத முடியும். இருந்தாலும் அது உங்களுக்கு கொண்டாட்டமாக இருக்காது.

எப்பொழுது மரணம் ஒரு மகிழ்ச்சிகரமான கொண்டாட்டமாக இருக்கும் என்றால் எப்பொழுது அது ஒரு பெரிய புரிந்து கொள்ளுதலாகவும், பெரிய வெளிப் பாடாகவும் இருக்கும் என்றால் நீங்கள் உங்கள்



வாழ்க்கையில் உங்கள் உள்ளே உள்ள மேலான நிலையைத் தொட்டிருக்க வேண்டும்.

நீங்கள் உங்களது வெறுமையான மைய நிலையை அடைந்திருக்க வேண்டும். அந்த மைய நிலையில் நீங்கள் உடலும் இல்லை, மனமும் இல்லை. அதேபோல உங்கள் மன சம்பந்தமான சங்கீதம், கவிதை, காவியம், ஓவியம் போன்ற இன்ப உணர்வுகளுக்கும் அங்கு இடம் இல்லை.

உங்களது சகல அனுபவங்களும் அங்கு அகன்று விடுகின்றன. நீங்கள் வெறுமனே அறிவு வடிவமாக, வெறுமனே தெளிந்த நிலையாக இருப்பீர்கள். அப்பொழுது மரணம் ஒரு வித்தியாசமான அனுபவ மாகவே இருக்கும்.

நீங்கள் உங்களது மேலான மைய நிலையைப் பற்றி சற்றேனும் அறிந்திருந்தால் அனுபவப்பட்டிருந்தால் உங்களுக்கு மரணம், இந்த பிரபஞ்சத்தின் மேலான நிலையை விளக்கும். அப்பொழுது மரணம் ஓர் இறப்பாக இருக்காது. அது ஒரு கடவுளின் சந்திப்பாகவே இருக்கும்.

மனித வரலாற்றில் மரணத்தைப் பற்றி மூன்று கருத்துகளை நீங்கள் சந்திக்கலாம்.

ஒன்று: சாதாரண மனித வாழ்க்கை. இந்த மனிதர்கள் தங்கள் உடல் மேல் மிகுந்த பற்று கொண்டு இந்த உடல் இன்பத்தைத் தவிர வேறு மேலான இன்பமும் எதுவும் இல்லை என்று கருதுவார்கள். இவர்களுக்கு, உணவு, காம இன்பம் இவற்றைத் தவிர வேறு எதுவுமே தெரியாது.

இப்படிப்பட்ட வாழ்க்கை மிகவும் புராதனமானது. மிகவும் மட்டமானது. இவர்கள் ஓர் அரண்மனையின் வெளிப்புறத்தில் வசிப்பவர்கள். இந்த வெளிப்புறம்தான்

உண்மையான அரண்மனை வாழ்வு என்று கருதுபவர்கள். அந்த அரண்மனைக்குள் அவர்கள் நுழைந்ததே கிடையாது. அதற்கு அவர்களுக்கு அவகாசமும், மனமும் இல்லை.

இப்படிப்பட்ட வாழ்வு நடத்துபவர்கள், இறக்கும் தருவாயில் அந்த வாழ்வை விட மறுக்கிறார்கள். இறப்பை எதிர்க்கிறார்கள். அதனுடன் போராடுகிறார்கள். அதை ஓர் அசுர எதிரியாகக் கருதுகிறார்கள்.

ஆகவே, இந்த உலகம் முழுவதும், எல்லா சமூகத்திலும் இறப்பை ஒரு கறுமை நிறத்திற்கும், பிசாசு போலவும் ஒப்பிட்டுக் கருதுகிறார்கள். இந்தியாவில் இறப்பை அறிவிக்கும் தூதனை, கருமை நிறமுடைய அருவருப்பான வனாகச் சித்திரிக்கிறார்கள்.

அவன் ஓர் பெரிய, அழகற்ற எருமை மீது ஏறி வருபவனாகக் காட்டியிருக்கிறார்கள். இவர்களால் இப்படித்தான் செயல்பட முடியும். இவர்களால் வாழ்வின் சகல பரிமாணங்களை அறிந்திருக்க முடியாது. இவர்கள் முழு வாழ்வை இழந்து விட்டவர்கள். வாழ்வின் அடித்தளத்தை இவர்களால் தொட முடியாது.

அதேபோல் வாழ்வின் மிக உயரத்துக்கும் இவர்களால் பறக்க இயலாது. அவர்கள் நிறைந்த முழு பலனை அடையாதவர்கள்.

அடுத்து இரண்டாவது வகையினர்: கவிகள், தத்துவம் பயின்றோர் போன்றவர்கள் சில நேரங்களில் சொல்லி இருக்கிறார்கள்.

“மரணம் ஓர் மோசமான நிகழ்ச்சி இல்லை. அது கெட்ட சம்பவம் இல்லை. அது ஒரு பெரிய தூக்கம். ஒரு



சிறந்த இளைப்பாறுதல் ஆகும்” என்று. இந்த விளக்கம், முதல் வகையினர் கொண்ட கருத்தைவிடச் சிறந்தது.

ஏனெனில் இவர்கள் ஓரளவுக்காவது, இந்த உடலுக்கும், மனதிற்கும் அப்பால் உள்ள நிலையைத் தெரிந்து வைத்திருக்கிறார்கள் என்று சொல்லலாம். இவர்களது வாழ்க்கை, சாப்பாடு மற்றும் மக்கள் உற்பத்தி என்று மட்டும் இல்லாமல் ஆத்மீக இயல்பை சிறிது நெருங்கி இருக்கிறார்கள் என்று கருதலாம். இவர்கள் சிறிது முன்னேற்றம் அடைந்த நாகரிகமான ஆத்மாக்கள்.

ஒருவன் வாழ்வில் களைப்படைந்து மரணத்தில் இளைப்பாறுகிறான். அது ஒரு களைப்பாறும் இடம்தான். ஆனால் இவர்கள்கூட உண்மை நிலையைவிட்டு வெகுதூரத்தில் தான் இருக்கிறார்கள்.

வாழ்வின் மைய நிலையை அறிந்தவர்களுக்கு மரணம் என்பது கடவுள் தன்மை என்று புரியும். இவர்களே மேலானவர்கள்; இறப்பு என்பது வாழ்க்கையின் களைப்பாறுதல் மட்டுமல்ல. அது ஒரு புதிய வாழ்க்கைக்கு ஓர் புதிய ஆரம்பத்தின் திறப்பு விழாவாகும்.

பயாசித் (Bayazid) என்னும் சுஃபி (Sufi) ஞானி இறக்கும்போது அவரைச் சுற்றியுள்ள சீடர்களுக்கு, அவர் முகத்திலிருந்து வெளிப்பட்ட பிரகாசமான, அழகான ஒளிக் கதிர்களைக் கண்டு ஆச்சரியம் ஏற்பட்டது.

இயற்கையிலேயே பயாசித் அழகானவர்தான். அவர் முகத்தைச் சுற்றி எப்பொழுதும் ஒரு சிறு வடிவம் இருக்கும். இதை அவரது சீடர்கள் அறிவார்கள். ஆனால் இப்படிப்பட்ட பிரகாசத்தை அவர்கள் இதற்கு முன் பார்த்ததில்லை.

ஆகவே அவர்கள், "பயாசித் அவர்களே, உங்களுக்கு இப்பொழுது என்ன நேரிடுகிறது என்று சொல்லுங்கள். நீங்கள் இறப்பதற்கு முன் கூறும் கடைசிச் செய்தியாக இருக்கட்டும்" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர் மெல்ல கண்களைத் திறந்து, "கடவுள் என்னை வரவேற்றுக் கொண்டிருக்கிறார். நான் அவரது அணைப்பிற்காகச் செல்லுகிறேன். நன்றி, வணக்கம்." என்றார்.

பிறகு அவர் தன் கண்களை மூடினார். அவர் மூச்சும் நின்றது. அவர் மூச்சு நின்ற அந்த வினாடியில் ஒரு பெரிய பிரகாசம் தோன்றி அந்த அறை முழுவதும் பரவி பிறகு மறைந்தது. எவன் ஒருவன் தன்னிடம் உள்ள அந்த மையப் பொருளை அறிந்திருக்கிறானோ அவன் மரணம் என்பது கடவுளின் அடுத்த முகம் என்று அறிவான். அப்பொழுது மரணம் ஒரு தெய்விக நடனம்போல விளங்கும்.

நீங்கள் மரணத்தை எப்பொழுது ஒரு கொண்டாட்டமாக கருத முடியவில்லையோ, அப்பொழுது நீங்கள் வாழ்வை தவற விட்டுவிட்டீர்கள் என்று புரிந்து கொள்ளுங்கள். இந்த முடிவான மரணத்தை எதிர்கொள்ளுவதற்காகவே நாம் வாழ்வை முழுவதுமாக தயார் செய்ய வேண்டும்.

இதுதான் இந்த அழகான கதையின் அர்த்தம்.

ரபி பிர்ன்ஹாம் (Robbi Brinham) என்ற ஞானி, மரணப் படுக்கையில் இருக்கும்போது, அவரது மனைவி கண்ணீர் விட்டு அழுதாள். அப்பொழுது அவர் "நீ எதற்காக கண்ணீர் விடுகிறாய்? எப்படி இறப்பது என்பதை கற்றுக்கொள்ளவே நான் என் வாழ்நாளையெல்லாம் செலவழித்தேன்" என்றார்.



மரணத்தை எதிர்கொள்ளும் ரகசியத்தை அறியவே அவர் தன் வாழ்நாளையெல்லாம் தயார் செய்திருக்கிறார்.

எப்படி இறப்பது என்பதைக் கற்றுக்கொடுப்பதற்காகவே, சகல மதங்களும் ஒரு விஞ்ஞானமாக, ஒரு கலையாக விளங்க வேண்டும். "எப்படி இறப்பது என்பதை சொல்லிக் கொடுக்க ஒரே வழி, எப்படி வாழ்வது என்பதைக் கற்றுக்கொடுப்பதைத்தவிர வேறு வழி இல்லை. இரண்டும் வெவ்வேறு அல்ல." நீங்கள் சரியான வாழ்வு என்ன என்பதைப் புரிந்துகொண்டால் எது சரியான மரணம் என்பதையும் புரிந்து கொள்ளுவீர்கள்.

ஆகவே முக்கியமான அடிப்படையான விஷயம் என்னவென்றால், "எப்படி வாழ்வது" என்பதே.

நான் சில கருத்துகளைக் கூறுகிறேன்: முதலில், உங்களுடைய வாழ்க்கை உங்களுக்கே சொந்தம். வேறு யாருக்கும் அல்ல. ஆகவே அதன் மேல் வேறு யாரும் அதிகாரம் செய்ய, ஆக்ரமிக்க இடம் கொடுக்காதீர்கள்.

அப்படிச் செய்தால், அது அந்த வாழ்க்கைக்குச் செய்யும் துரோகம் ஆகும். அதன்மேல் அதிகாரம் செய்ய பிறரை நீங்கள் அனுமதித்தால் - அது உங்கள் சமூகமோ அல்லது கல்வி முறையோ அரசாங்கமோ மதகுருவோ யாராக இருந்தாலும் - நீங்கள் உங்கள் உண்மையான வாழ்வை தவறவிட்டு விடுவீர்கள். ஏனெனில் அந்த அதிகாரம் எல்லாம் வெளியிலிருந்து வந்து உங்களைக் கட்டுப்படுத்துபவை. ஆனால் வாழ்வு உங்கள் உள்ளே இயங்குவது, இரண்டும் சந்திக்கவே முடியாது.

இதனால், நீங்கள் ஒவ்வொன்றிற்கும் மறுப்பு சொல்ல வேண்டும் என்று நான் கூறுவதாக ஆகாது. அப்படி நீங்கள்

செய்தால் அதனால் எந்த பிரயோஜனமும் இல்லை. உலகத்தில் இரண்டு வகை மக்கள் இருக்கிறார்கள். ஒரு பகுதியினர், மிகவும் அடக்கமானவர்கள். இவர்கள் எதையும் எவரிடமும் சரணாகதியாக்க தயாராக இருப்பவர்கள்.

அவர்களுக்கு என்று தனியாக சுதந்திரமான ஆன்மா என்று எதுவும் இல்லை. அவர்கள் குழந்தையைப் போல் இருப்பவர்கள். தகப்பனாருடைய உத்தரவிற்காகவோ அல்லது வேறு யாருடைய கட்டளைக்காகவோ காத்திருக்கும் குழந்தை மனப்பான்மை உடையவர்கள்.

அவர்களால் ஆன்மாவை, உண்மையான வாழ்வை, நம்ப இயலவில்லை. இப்படிப்பட்ட மக்கள்தான் உலகத்தில் பெரும்பான்மையோர். இவர்கள் மிகவும் சாதாரணமான மக்கள்.

இதைத் தவிர, சமூகக் கோட்பாடுகளை எதிர்க்கும் ஒருசிறு பிரிவினர் உள்ளனர். இவர்கள் தங்களை புரட்சிக்காரர்கள் என்று எண்ணிக்கொண்டிருக்கின்றனர். ஆனால் உண்மையில் அப்படி இல்லை. அவர்கள் புரட்சிக்காரர்கள் அல்லர். அவர்கள் மறுப்பாளர்கள். எதையும் மறுக்கவேண்டும் என்ற கொள்கையுடையவர்கள்.

நீங்கள் சமூகத்தை எதிர்த்தாலும் அல்லது அத்துடன் ஒத்துப் போனாலும் இரண்டு வகையிலும் சமூகமே உங்களை ஆக்கிரமித்துக்கொண்டு இருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள்.

இன்னொரு கதை சொல்லுகிறேன்.

ஒரு சமயம் முல்லா நசுருதீன் கொஞ்ச காலம் வெளியூருக்குச் சென்ற பிறகு ஒரு நீண்ட தாடியுடன்



ஊருக்குத் திரும்புகிறார். அப்பொழுது அவரது நண்பர்கள் தாடியைப் பார்த்து கிண்டல் செய்து, "இப்பொழுது ஏன் எதற்காக இதை வளர்க்கிறீர்கள்" என்று கேட்டார்கள். அதற்கு முல்லா, தன் தாடியைப் பற்றி மிகவும் இழிவாகத் தூற்றுகிறார். இதைக் கேட்ட அவரது நண்பர்கள் ஆச்சரியம் அடைந்து, "பிடிக்காமல் எதற்கு இந்தத் தாடியை வைததிருக்கிறீர்கள்" என்று கேட்கிறார்கள்.

அதற்கு முல்லா, "நான் இதை உண்மையிலேயே வெறுக்கிறேன்" என்கிறார்.

"அப்படியானால் அதை மழித்து எறிய வேண்டியது தானே" என்று அவரது நண்பர்கள் கூறுகின்றனர்.

அப்பொழுது முல்லாவின் முகத்தில் ஒரு வில்லத்தனம் ஏற்பட்டு, "ஏனெனில் என் மனைவியும் இதை வெறுக் கிறாள்!" என்கிறார்.

ஆகவே, நீ ஒன்றை வெறுத்தாலும் விரும்பினாலு அதனிடமிருந்து விடுதலை அடையவில்லை. ஹிப்ப போன்ற பகுதியினர், உண்மையில் புரட்சிக்காரர்க அல்லர். அவர்கள் மறுப்பாளர்கள். எதிர்ப்பாளர்கள்.

சமூகம் எதைக் கொடுத்தாலும் அதை மறுப்பவர்க ஒருசிலர் பணிந்து போகலாம். மற்றும் சிலர் பணி மறுக்கலாம். ஆனால் அவற்றை எதைக் குறித் செய்கிறார்களோ, அது மாறவே இல்லை? பணிபவர்களு பணிய மறுப்பவர்களும்- யாருமே - தன்னுடை உண்மையான ஆத்மாவை அறியவில்லை.

ஓர் உண்மையான புரட்சிக்காரன் யார் என்றா எவன் ஒருவன் சமூகத்தோடு ஒட்டியோ அல்ல புறம்பாகவோ செல்லாமல் தன் வாழ்வை அறி

வாழ்கிறானோ, அவன்தான் உண்மையான புரட்சிக் காரன். அப்படி அவன் வாழும் வாழ்வும், சமூகத்தோடு அனுசரித்தோ அல்லது மறுத்தோ இருப்பது முக்கியமல்ல. அது சமூகத்தோடு சில நேரம் ஒத்து இருக்கலாம். பலமுறை புறம்பாக இருக்கலாம்.

இந்த விஷயத்தைப் பற்றி ஆராய்வது முக்கியமல்ல. அவன் தன் உள் ஒளியை அறிந்த வகையில் இயல்பாக வாழ்கிறான். அப்படி வாழ்வதில் அவன் பெருமை அடைகிறான் என்று நான் கூற வரவில்லை. அப்படி வாழ்பவன் மிக்க அடக்கமாக இருப்பான்.

அவனது உள் ஒளி மிகச் சிறியதுதான் என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அதுமட்டும்தான் அவனோடு இயைந்து இருப்பது. அதனால் அவன் அகங்காரம் கொள்வதில்லை. மிகவும் அடக்கமாகவே இருப்பான்.

அவன் "நான் தவறாக நடக்கலாம். ஆனால் என் வழியே, நான் தவறாகவே நடக்க என்னை அனுமதி யுங்கள். என்னைக் கட்டுப்படுத்தாதீர்கள்" என்பான்.

இந்த முறையில்தான் நீங்கள் உண்மையாகக் கற்றுக் கொள்ள முடியும். கற்றுக்கொள்வதற்கு ஒரே வழி, தவறுகள் செய்வதே. ஒருவன் வளர, முதிர்ச்சி அடைய, அவன் தான் அறிந்த, புரிந்த முறையிலேயே செல்லுவது தான் சரி.

நீங்கள் கீழ்ப்படிந்தாலும், கீழ்ப்படியாவிட்டா லும் நீங்கள் எப்பொழுதும் அடுத்தவர் கட்டளைக்காகக் காத்திருக்கும் வரையில் எந்த வித்தியாசமும் நேரப் போவதில்லை. நீங்கள் எதுவரை, அடுத்தவர் கட்டளைக் காக, அடுத்தவர் தீர்மானத்துக்காக காத்திருக்கிறீர்களோ



அதுவரை, நீங்கள் உங்களுடைய உண்மையான வாழ்க்கையை அறியவே முடியாது, நீங்கள் உங்களது உள் ஒளியை ஒட்டியே வாழ முற்பட வேண்டும்.

நீங்கள் என்ன செய்யவேண்டும் என்று உங்களால் தீர்மானிக்க முடியாது. உங்களுக்கு குழப்பங்கள் ஏற்படும். அப்படியே இருக்கட்டும். ஆனால் அந்தக் குழப்பத்திலே யும் ஒருவழியைக் கண்டுபிடித்து முடிவு செய்வதும்; பிறர் உங்களுக்கு எப்பொழுதும் நடந்துபோன முடிவான கொள்கையை, கருத்துகளைக் கொடுப்பதால் அதைக் கேட்பதும் அதன்படி வாழ்வதும் மிகவும் எளிய, சாதாரண வழியாகும்.

அவர்கள், "இதைச் செய். அதைச் செய்யாதே" என்று கட்டளை இடுவார்கள். அவர்களது கட்டளையில் அவர்கள் உறுதியாக இருப்பார்கள்.

தீர்மானத்தைத் தேடி அலையாதீர்கள். புரிந்து கொள்ளுதலைத் தேடுங்கள். நீங்கள் முடிவான தீர்மானத்தைத் தேடினால், அதற்கு இரையாகி விடுவீர்கள். ஆகவே, தீர்மானக் கருத்துகளைத் தேடாதீர்கள். புரிந்து கொள்ளுதலைத் தேடுங்கள்.

முடிவான கருத்துக்களை யார் வேண்டுமானாலும் கொடுக்கலாம். அவை மிகவும் மலிவானவை. ஆனால் முடிவில் ஆராய்ந்தால் நீங்கள் இழந்தவர்கள் ஆவீர்கள். நீங்கள் பாதுகாப்பாக இருப்பதற்காக உங்கள் உண்மையான வாழ்வை இழந்தவர்கள் ஆவீர்கள். உண்மையான வாழ்வு தீர்மானமானது அல்ல: அது பாதுகாப்பு எதுவும் இல்லாதது.

வாழ்வு பாதுகாப்பு இல்லாததுதான். பாதுகாப்பில்லாத நிலையை நோக்கி அது ஒவ்வொரு வினாடியும் ஊர்ந்து

கொண்டேதான் இருக்கிறது. பார்க்கப்போனால் அது ஒரு சூதாட்டம் மாதிரிதான். என்ன நடக்கப்போகிறது என்று யாராலேயும் முன்கூட்டியே சொல்ல முடியாது. அதேபோல ஒருவன் அதை அறியாமலே இருப்பதுதான், அதன் அழகும் ஆகும்.

ஒருவன் அதை முன்கூட்டியே அறிந்தால் வாழ்க்கை வாழ்வதற்கே தகுதியில்லை. நீங்கள் நினைத்தபடி வாழ்வு அமைந்தால் எல்லாமே இப்படித்தான் நடக்கும் என்று உங்களுக்கு முன்கூட்டியே தெரிந்தால், நீங்கள் மனித வாழ்வு வாழமாட்டீர்கள். நீங்கள் ஒரு மெஷின்தான். மிஷினுக்கு மட்டும்தான் எல்லாமே தீர்மானமாக, பாதுகாப்பாக இருக்கும்.

லாசூ (Laotzu) சொல்லுகிறார்: "நான் எதற்கும் தயங்குபவன். முன்கூட்டியே வாழ்க்கையில் எதையும் தீர்மானிக்க முடியாத காரணத்தால், நான் ஒவ்வோர் அடியையும் மிகவும் கவனமாக வைக்கிறேன். வழி நடத்தும் கொள்கை எதுவும் எனக்கில்லை.

ஒவ்வொரு வினாடியும் நிகழ்ச்சியை நான் எதிர் கொள்ள வேண்டும். என்னால் எதையும் முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது. அந்த நேரத்தில்தான் நான் முடிவு எடுக்க வேண்டும்."

ஆகவே ஒருவன் மிகவும் கவனமாகச் செயல்பட வேண்டும். இதைத்தான் பொறுப்பு என்று அழைக்கிறோம். பொறுப்பு என்பது கடமையோ அல்லது கட்டாயமாகத் திருப்பி செய்யக்கூடியதோ அல்ல. அது ஒரு எதிர்கொள்ளும் ஆற்றல்.

ஒருவனுக்கு வாழ்க்கை என்பது தெரியவேண்டுமானால், அவனுக்கு 'எதிர் கொள்ளுதல்' என்றால் என்ன



என்பதும் தெரியவேண்டும். ஆனால் இது தவற விடப்பட்டுள்ளது.

பல நூற்றாண்டு காலமாக ஏற்படுத்தப்பட்டுள்ள சமூக சட்ட திட்டங்கள், உங்களை ஒரு யந்திரமாக ஆக்கி விட்டன. நீங்கள் உங்கள் ஆண்மையை இழந்துவிட்டீர்கள். உங்கள் பாதுகாப்பிற்காக, சமூகத்திடம் சமாதானம் செய்து கொண்டுள்ளீர்கள். ஆகவே நீங்கள் மிகவும் பாதுகாப்பாகவும், சமூகத்திடம் சமாதானம் செய்து கொண்டுள்ளீர்கள். ஆகவே நீங்கள் மிகவும் பாதுகாப்பாகவும் வசதி பெற்றவராகவும் ஆகி இருக்கிறீர்கள். எல்லாமே ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டது. எல்லாமே அளந்து வரையறுக்கப்பட்டுள்ளன.

ஆனால் வாழ்வை அளந்து எல்லை கட்ட முடியாது. அது ஒரு முட்டாள்தனமான செய்கையாகும். அதை அளக்கவே முடியாது. வாழ்வு சதா மாறிக்கொண்டே இருப்பதால், அதற்கு சட்ட திட்டங்கள் என்று எதையும் ஏற்படுத்த முடியாது. அதற்கு "மாறிக் கொண்டே இருத்தல்" என்பதுதான் நிரந்தரம். வேறு எதுவும் நிரந்தரம் இல்லை. ஹீராகிலிட்டஸ் சொல்லுகிறார்: "ஒரே ஆற்றில் இரண்டு முறை இறங்க முடியாது."

வாழ்வின் வழி மிகவும் நெளிவு சுளிவு மிகுந்தது. வாழ்வின் பாதை புகைவண்டி தடம்போல் ஒரே சீரானது அல்ல. அது எந்தத் தடத்தின் மேலும் செல்ல முடியாது. அதனுடைய அழகும், பெருமையும், கவித்தன்மையும், சங்கீதமும் அதுதான். அது சதா ஆச்சரியமானது.

நீங்கள் பாதுகாப்பைத் தேடினால் உங்கள் கண் மூடிவிடும். நீங்கள் உங்களுடைய ஆச்சரியம், ஆனந்தப்படும் தன்மையை, மெல்ல மெல்ல இழந்து விடுவீர்கள்.

என்றைக்கு நீங்கள் மேற்படி தன்மைகளை இழக்கிறீர்களோ, அன்றைக்கே, நீங்கள் சமயத் தன்மையை இழந்தவர் ஆவீர்கள். 'சமயம்' என்பது உங்களுடைய ஆச்சரியப்படும், ஆனந்தப்படும் தன்மையின் திறவுகோலாகும்.

நம்மைச்சுற்றி உள்ள பல அறிவுக்கெட்டாத ஆச்சரியங்களைக் கண்டு, ஆனந்தம் அடையும் தன்மையே சமயம் என்பது. அதற்கு நாம் நம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஆகவே, எப்படி வாழ்வை வாழ்வது என்பதற்கு பிறர் அபிப்ராயங்களைத் தேடி அலையாதீர்கள். பல பேர் என்னிடம் வந்து, "ஓஷோ! வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என்று சொல்லுங்கள்" என்று கேட்கிறார்கள்.

வாழ்க்கையைப் புரிந்துகொள்ள உங்களுக்கு ஆர்வம் இல்லை. உங்கள் வாழ்க்கைக்கு விதிமுறைகள் ஏற்படுத்தி அதன்படியே நடக்க மட்டும்தான் விரும்புகிறீர்கள்.

வாழ்வை வாழ விருப்பப்படாமல் அதை அழிப்பதிலேயே குறியாக இருக்கிறீர்கள். உங்கள் மேல் ஒரு நெறியை ஒரு கொள்கையை திணிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள்.

உலகம் முழுவதும், அரசியல்வாதிகளும், மதகுருமார்களும், உங்கள் மேல் பல நெறிகளை சட்ட திட்டங்களைத் திணிக்கக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் நீங்கள் சென்றால், உங்களுக்கு பல நெறிகளை மிகத் தாராளமாக வழங்குவார்கள்.

அவர்களுடைய எண்ணங்களைத் திணிக்கும் அந்த சந்தர்ப்பத்திற்காக அந்த கௌரவத்திற்காக மிக ஏங்குகிறார்கள்.



ஆனால் நான் அதற்காக இங்கே உட்கார்ந்திருக்கவில்லை. உங்களுடைய விடுதலைக்காகவே இங்கே இருக்கிறேன். அப்படி நான் சொல்லும்பொழுது அதில் நானும் அடக்கம்தான். நான் உங்களுக்கு உதவி செய்வதனால் நானும் விடுதலை அடைகிறேன்.

என்னுடைய சந்நியாசம் கேட்பதற்கு முட்டாள் தனமாக இருக்கும். ஆனால் அதுதான் உண்மையாகும். நீங்கள் விடுதலை அடைய என்னிடம் சரணாகதி அடையுங்கள். உங்களை சகல கோட்பாடுகளிலிருந்தும் சகல மத சட்ட திட்டங்களிலிருந்தும் சகல தத்துவங்களிலிருந்தும் பூரணமாக விடுதலை செய்யவே உங்களை ஏற்றுக்கொண்டு என் சந்நியாசத்துக்கு அனுமதிக்கிறேன். அதில் நானும் சேர்ந்து கொள்ளுகிறேன்.

எப்படி வாழ்வு முட்டாள்தனமாகக் காணப்படுகிறதோ, அதைப் போலவே, என் சந்நியாசமும் முட்டாள்தனமாகத்தான் தோன்றும். அப்படி இருந்தால்தான் உயிரோட்டமுள்ளதாக இருக்க முடியும்.

ஆகவே, வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என்று யாரிடமும் கேட்காதீர்கள். வாழ்வு மிக அற்புதமானது. அதில் வாழ முயலுங்கள். அப்பொழுது நீங்கள் தவறே செய்யமாட்டீர்கள் என்று கூறவில்லை. தவறு கண்டிப்பாக செய்வீர்கள். ஆனால் ஒன்றை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ஒரே தவறை மீண்டும் மீண்டும் செய்யாதீர்கள். இதுபோதும்.

தினமும் நீங்கள் ஒரு புதிய தவறைச் செய்தாலும் செய்யுங்கள் தவறில்லை. ஆனால் அந்தத் தவறை திரும்பச் செய்யாதீர்கள். அது முட்டாள்தனம். ஒருவன் புதிய புதிய தவறுகளைச் செய்துகொண்டே போனால் அவன்

தொடர்ந்து வளர்ந்து கொண்டிருக்கிறான் என்று அர்த்தம். இப்படித்தான் வாழ்வில் மெல்ல மெல்லக் கற்று அவனுடைய உள் ஒளியை அடைய வேண்டும்.

நான் கேட்டிருக்கிறேன்.

அவாதி கெர்மான் (Awhadi of Kerman) என்னும் முஸ்லிம் கவிஞர், தன் வீட்டின் வெளிப்புறத்தில் உட்கார்ந்துகொண்டு ஒரு பேழையை உற்று நோக்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது அந்த வழியே சென்ற தப்ரிஷி ஷாம் (Shame-eTaprizi) என்ற ஞானி, அவரைப் பார்த்து, "என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று ஆர்வத்துடன் கேட்டார்.

அதற்கு அந்தக் கவிஞர், "இந்தப் பேழையில் உள்ள நீரில் விழும் அந்த சந்திரனின் பிம்பத்தைக் கண்டு ரசிக்கிறேன்" என்றார்.

இதைக்கேட்ட அந்த ஞானி, மிக உரக்க சிரித்தார். இது அந்த கவிஞருக்கு தர்மசங்கடத்தை ஏற்படுத்தியது. அவருடைய பலத்தை சிரிப்பைக் கண்டு கூட்டமும் சேர்ந்துவிட்டது.

பிறகு அந்தக் கவிஞர், "ஏன் இப்படிச் சிரிக்கிறீர்கள்! நான் சொன்னதில் என்ன வேடிக்கை இருக்கிறது?" என்று கேட்டார்.

ஞானி, ''உங்கள் கழுத்துக்கு ஒன்றும் ஆகாமல் இருந்தால், நீங்கள் ஏன் நேரடியாக அந்த ஆகாயத்தில் உள்ள சந்திரனை பார்த்து ரசிக்கக்கூடாது?'' என்று கேட்டார்.

ஆகாயத்தில் முழு நிலா காய்கிறது. ஆனால் இந்தக் கவிஞனோ, தண்ணீரில் விழும் பிம்பத்தைக் கண்டு



ரசிக்கிறார். இதைப்போல வேதம் போன்ற சமய நூல்களிலும், தத்துவக் கொள்கைகளிலும் உண்மையை அல்லது வாழ்வைத் தேடுவது என்பது சந்திரனை நீரில் தேடுவது போலத்தான்.

நீங்கள் பிறரிடம் வாழ்வை எப்படி வாழ்வது என்று கேட்க முனையும்பொழுது, அது ஒரு தவறான பாதையைக் கேட்பதற்குத்தான் சமமாகும்.

ஏனெனில் ஒருவர் தான் வாழும் வாழ்க்கையை தான கொண்ட கொள்கையைத்தான் அவரால் கூற முடியும். ஒருபோதும், இருவர் வாழ்வும் ஒன்றாக இருக்கவே இருக்காது. அவர் சொல்லுவது அனைத்தும் அவருடைய வாழ்வைப் பற்றித்தான். அதுகூட அவர் வாழ்ந்தவரையில் உள்ளதைத்தான் சொல்ல முடியும்.

அப்படி அவர் வாழ்ந்த வாழ்க்கையில் பிறருடைய போதனைகள் கோட்பாடுகள் கலந்தே தான் இருக்கும். அப்படிப் பார்த்தால் அவர் ஒரு நடிகர்தான்.

அப்பொழுது அவரது வாழ்க்கை, ஒரு பிரதிபிம்பத்தின் பிரதிபிம்பம்போல்தான் ஆகும். இப்படியாக பல கோடி மக்கள் பல நூற்றாண்டுகளாக பல பிரதிபிம்ப வாழ்க்கையை அனுபவித்து வருகிறார்கள். ஆனால் உண்மையான சந்திரன் ஆகாயத்தில் எப்பொழுதும் உங்களுக்காக காத்துக்கொண்டிருக்கிறது. அது உங்களுக்கே சொந்தம். அதை நேராக நோக்குங்கள். அதனுடன் நேரடியாகத் தொடர்புகொள்ளுங்கள்.

எதற்காக அடுத்தவர் கண்களை இரவலாகப் பெற வேண்டும்? ஒன்றை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். எப்பொழுது இரவல் வாங்குகிறீர்களோ, அப்பொழுதே அது உங்களுடைய விஷய ஞானமாகிவிடுகிறது. அது ஒருபோதும் 'அறிந்துகொள்ளுதல்' ஆகாது.

ஒருவன், தனக்குத்தானே அனுபவப்பட்டால்தான் உண்மையை அறிந்துகொள்ள முடியும். நான் அந்த சந்திரனைப் பார்த்தால் அதை நான் மட்டுமே அறிந்து கொள்ள முடியும். ஆனால் அதைப்பற்றி உங்களிடம் நான் சொன்னால், அது ஒரு விஷயம்தான். அது ஒருபோதும் புரிந்து கொள்ளுதல் ஆகாது. அப்பொழுது அது ஒரு வார்த்தைகளின் கூட்டுதான். வெறும் மொழிவடிவம்தான். ஆனால் எல்லா மொழிகளும் பொய்தான்.

ஒரு கதை சொல்லுகிறேன் -

ஒரு கோழிப் பண்ணைக்காரர், தன் பண்ணையின் முட்டை உற்பத்தியில் அதிருப்தி அடைந்து, அதிக முட்டைகளை பெட்டைக்கோழிகள் இட, சில யுக்திகளைச் செய்ய விரும்பினார். அதற்காக ஓர் அழகிய பல நிறமுடைய பேசும் ஆண் கிளியை வாங்கி, அந்த பண்ணைக்குள்ளே வைத்தார்.

அதைப்பார்த்த பெட்டைகள், மிகவும் குதூகலம் அடைந்து, அதைக் கவருவதற்காக நல்ல உணவு தானியங்களை அதற்கு காட்டின. இளம்பெட்டைகள் அதைச் சுற்றி வர மிகவும் விரும்பின. அந்த மகிழ்ச்சியில் அவற்றின் முட்டையிடும் தன்மையும் உயர்ந்தது. இதனால் அந்தப் பண்ணையார் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த பழைய ஆண் சேவலுக்கு எரிச்சல் ஏற்பட்டு, தான் அலட்சியப்படுவதை சகிக்க முடியாமல், அந்த ஆண் கிளியின் மேல் பொறாமை கொண்டு, அதைத் தன் அலகால் கொத்தி, அதன் சிவப்பு, பச்சை இறக்கைகளை பிய்த்து எறிந்தது.

கிளி பயந்து, அதை எதிர்க்க முடியாமல், "உன்னை கெஞ்சுகிறேன். தயவு செய்து என்னை விட்டுவிடு. நான்



இங்கு ஒரு பேசும் வாத்தியார் போலத்தான் வந்தேன். எனக்கும், இந்த பெட்டைகளின் உற்சாகத்துக்கும் சம்பந்தமில்லை" என்று கதறியது.

அநேக மக்கள், மொழி அறிஞர்களாகவே வாழ்கின்றனர். இது ஒரு பொய்யான, போலியான வாழ்க்கை. உண்மைக்கு மொழி தேவையில்லை. அது எந்தவித வார்த்தையும் இல்லாமல் உங்களிடம் நேரடியாகத் தொடர்புகொள்ள விரும்புகிறது.

ஆகாயத்தில் உள்ள சந்திரன், எந்த பேழையும், எந்த இடைப்பொருளும் இல்லாமல் நேரடியாகவே உங்களைத் தொடர்புகொள்ள விரும்புகிறது.

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் அதை நேரடியாக நோக்க வேண்டும். அது ஒரு வார்த்தை - தொடர்பு இல்லாத இணைப்பு. பூரணமான வாழ்க்கை உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. நீங்கள் அதனுடன் வார்த்தை தொடர்பு இல்லாமல் அதை அடையக் கற்றுக்கொள்ளுதலே உங்கள் லட்சியமாக இருக்கவேண்டும்.

அதுதான் தவம் செய்வதன் நோக்கம். நீங்கள், எந்தவித வார்த்தை ஊடுருவல் இல்லாமல், உங்களுடைய எந்த படித்த கருத்துகளுக்கும் இடம் இல்லாமல், உங்களுக்கும் உண்மைக்கும் இடையில் யாருமே, எதுவுமே இல்லாமல் நீங்கள் வெறும் வெளியாக இருத்தலே தவத்தின் பயனாகும்.

நீங்கள் ஒரு பெண்ணை விரும்பினால் அதைப்பற்றி அடுத்தவரது அபிப்ராயம் என்னவாகயிருக்கும் என்பது பற்றிக் கவலைப்படாதீர்கள். ஏனெனில் அது எப்பொழுதும் உங்களுக்கு ஒரு தடையாகத்தான் இருக்கும்.

ஒரு பெண்ணை நீங்கள் மனப்பூர்வமாக விரும்பினால், அங்கு காதல் மட்டும்தான் இருக்க வேண்டும். நீங்கள், காதலைப் பற்றி அறிந்தவை அனைத்தையும் மறந்துவிட வேண்டும். காதலைப்பற்றிச் சொல்லிய மேதைகளான கின்சே (Kinseys), ஜான்சன் (Johnson), ப்ராய்டு (Fraud), ஜங் (Jung) போன்றவர்களுடைய கருத்துகளையெல்லாம் மறந்து விடுங்கள். வார்த்தை ஜாலம் புரியும் ஓர் ஆசிரியனாக மாறாதே. ஒரு பெண்ணை நீங்கள் விரும்பினால் அங்கு காதல் மட்டும் மலரட்டும். அது உங்களை வழிநடத்திச் செல்லட்டும்.

வாழ்வின் உள் அர்த்தத்தையும், ரகசியத்தையும் அறிய அது உங்கள் வழிகாட்டியாக இருக்கட்டும். அப்பொழுதுதான் உண்மையான காதல், அன்பு பற்றி உங்களுக்குத் தெளிவாக விளங்கும்.

அதேபோல், தியானம் பற்றி அடுத்தவர் சொல்லும் அனைத்துக் கருத்துகளும் அர்த்தமற்றவைதான். ஒருசமயம், தியானம் பற்றி ஒரு ஜைன சாமியார் எழுதிய புத்தகத்தை நான் படிக்க நேர்ந்தது. அந்தப் புத்தகம் உண்மையிலேயே மிக நன்றாக எழுதப்பட்டிருந்தது. ஆனால் அதில் ஒருசில இடங்களைப் படிக்கும்பொழுது அவர் தியானம் செய்யவில்லை. அவருக்கு அந்த அனுபவம் கிடையாது என்பது எனக்குப் புரிந்தது.

அந்தப் புத்தகத்தில் அதைப் போன்ற இடங்கள் மிக சொற்பமாகவும், நிறைய இடைவெளி விட்டும் காணப்படுவதால் மிகச் சுலபமாக அதைக் கண்டுபிடிக்க முடியாது. மற்றபடி மொத்தத்தில் அது மிக அழகாக எழுதப்பட்ட புத்தகம்தான். நான் அதை விரும்பினேன்.

பிறகு அதைப்பற்றி மறந்துவிட்டேன். ஒரு பத்து வருட காலம், இந்த தேசத்தைச் சுற்றிவரும்பொழுது,



இராஜஸ்தானில் உள்ள ஒரு கிராமத்தில் அந்தச் சாமியார் என்னை சந்திக்க வந்தார். அவருடைய பெயர் முன்பே எனக்கு அறிமுகம் ஆனதுபோல் தோன்றியது. பிறகு அந்த புத்தகம் ஞாபகம் வந்துவிட்டது.

நான் அந்த சாமியாரிடம் "என்ன விஷயமாக வந்தீர்கள்" என்று கேட்டேன். அதற்கு அவர், "தியானம் என்றால் என்ன என்பது பற்றி அறியவே உங்களிடம் வந்தேன்" என்றார்.

அதற்கு நான், "நீங்கள் எழுதிய புத்தகத்தை நான் நன்றாக ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறேன். ஏனெனில் அது என்னை மிகவும் கவர்ந்தது. ஆனால், உங்களுக்கு தவ அனுபவம் கிடையாது என்பதை, அதில் உள்ள ஒருசில இடங்கள் சுட்டிக்காட்டிவிட்டன. மற்றபடி அந்தப் புத்தகம், நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது சதம் நன்றாகவே உள்ளது. அதில் சந்தேகமே இல்லை.

இப்பொழுது நீங்கள் தியானத்தைப் பற்றி அறிய வந்திருக்கிறீர்கள், நல்லது. நீங்கள் எப்பொழுதாவது தியானம் செய்திருக்கிறீர்களா?" என்று கேட்டேன்.

அவருடைய சீடர்கள் அவருடன் இருந்ததால், இதற்குப் பதில் சொல்ல அவர் கொஞ்சம் சங்கடப்பட்டார். மறுபடி நான், "உண்மையைச் சொல்லுங்கள். உங்களுக்குத் தியானம் பற்றி தெரியும் என்று சொன்னால், நான் அதைப்பற்றிப் பேசுவதற்கு ஒன்றுமில்லை. அது முடிந்துபோன விஷயம். அதற்கு மாறாக, "நான் ஒருபோதும் தியானம் செய்ததில்லை." என்று நீங்கள் உண்மையாகச் சொன்னால் - இந்த ஒருதடவையாவது அது உண்மையாக இருந்தால்,

மேற்கொண்டு என்னால் உதவ முடியும்" என்றேன். ஒரு பண்டம் மாற்றல் போல் கூறினேன். ஆகவே, அவர் உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டியதாகிவிட்டது.

பிறகு அவர், "ஆமாம். இதுவரை அதைப்பற்றி யாரிடமும் நான் கூறியதில்லை. தியானம் பற்றி நான் அநேக புத்தகங்களைப் படித்திருக்கிறேன். பழைய நூல்கள், வேதம், சாஸ்திரங்கள் அனைத்தையும் படித்திருக்கிறேன். பல மக்களுக்கு அதுபற்றி விளக்கியும் வந்திருக்கிறேன். அதனால்தான் என் சீடர்களின் முன் உண்மையைச் சொல்ல சங்கடப்படுகிறேன். பல ஆயிரம் பேர்களுக்கு தியானத்தைப் பற்றி போதித்து இருந்தாலும் எழுதி இருந்தாலும் நான் இதுவரை தவம் செய்தது இல்லை" என்றார்.

ஆகவே, தியானம் பற்றி உங்களால் பல புத்தகங்கள் எழுத முடியும். ஆனால் தியானம் பற்றிய அனுபவத்தை நீங்கள் ஒருபோதும் தொட்டிருக்க முடியாது. வார்த்தைகளைக் கையாளுவதில் நீங்கள் மிகவும் கெட்டிக்காரர்களாக இருக்கலாம். விளங்க வைப்பதிலும், சர்ச்சைகளிலும் நீங்கள் திறமைசாலிகளாக இருக்கலாம். ஆனால் இதைப்போன்ற அறிவுக்கு வேலை கொடுக்கும் பல காரியங்களில் ஈடுபட்டு உங்களையே மறப்பதன் மூலம் பிற்பாடு இவை அனைத்தும் உங்களை நீங்களே அறிந்துகொள்ள உபயோகப்படாது என தெரிந்து கொள்ளுவீர்கள்.

பிறகு நான் அவரிடம், "நீங்கள் எவ்வளவு காலம், தியானம் பற்றி அறிந்துகொள்ள விருப்பம் உடையவ ராக இருந்தீர்கள்" என்றேன். அதற்கு அவர், "என் சிறு வயது முதல்" என்றார். அவருக்கு தற்போது எழுபது வயது இருக்கலாம். மேலும் அவர், "நான் இருபது வயது



இருக்கும்பொழுது சந்நியாசம் வாங்கினேன். நான் ஜைன சந்நியாசி ஆகி இந்த ஐம்பது வருட காலமும் பல புத்தகங்களைப் படிப்பதும், தியானத்தைப் பற்றி சிந்திப்பதும் தான் என் வேலை" என்றார்.

ஆக, அவர் சுமார் ஐம்பது வருட காலம் தியானத்தைப் பற்றி சிந்திப்பவராகவும், படிப்பவராகவும், மக்களுக்கு விளக்குபவராகவும் இருந்தும் அதைப் பற்றிய அனுபவத்தை அவர் அடைந்திருக்கவில்லை.

ஆனால் பெரும்பான்மை மக்களின் நிலையும் அதுதான். அவர்கள் காதல், அன்பு பற்றி பேசுகிறார்கள். காதல் கவிதைகள் பல அவர்களுக்கு மிக நன்றாகத் தெரியும். ஆனால், அவர்கள் ஒருபோதும் அன்பு செலுத்தியது இல்லை.

அவர்கள் தங்களை அன்பு உடையவர்களாகவும் அன்புடன் இணைந்து இருப்பது போல் நினைத்துக் கொண்டாலும் உண்மையில் அவர்கள் அன்பு செலுத்தியவர்களாக இருக்கமாட்டார்கள். அப்பொழுது அன்பு அறிவு சம்பந்தமான விஷயமாகி விடுகிறது. இதய உணர்வாக பரிணமிக்கவில்லை. மக்கள் வாழ்கிறார்கள். ஆனால் எப்பொழுதும் அதை தவறவிட்டுக்கொண்டே இருக்கிறார்கள்.

உண்மையாக உணர்வுபூர்வமாக வாழ்வதற்கு அவர்களுக்கு மிகுந்த துணிச்சல் தேவை. அது உங்களை எங்கெல்லாம் அழைத்துச் செல்கிறதோ, அங்கெல்லாம் செல்ல, உங்களுக்கு மிகுந்த தைரியம் தேவை. ஏனெனில் அதனுடைய பாதை முன்பே திட்டமிடப்படாதது. அதற்கென்று தனியாக வரைபடம் இல்லை. நீங்கள் இதுவரை அறியாத ஒன்றினுள் செல்ல வேண்டி வரும்.

இதற்கெல்லாம் தயாராக இருந்தால்தான், நீங்கள் இதற்கெல்லாம் அறிந்துகொள்ள முடியும். நீங்கள் வாழ்வு என்ன என்று அறிந்துகொள்ள முடியும். நீங்கள் இதுவரை அறிந்தவற்றையே சுற்றிக்கொண்டு இருந்தால் உங்கள் மனதையே சுற்றிக்கொண்டு இருப்பதாகவே அர்த்தம். ஆனால் மனம் வாழ்க்கையாகிவிடாது.

வாழ்வு என்பது மனம், அறிவு சம்பந்தப்பட்டது அல்ல. அது ஒரு முழுமை நிறைந்தது. உங்களுடைய முழுமை அனைத்தும் அதில் அடங்கி உள்ளது. நீங்கள் அதைப்பற்றி வெறுமனே நினைத்துக்கொண்டு இருப்பது மட்டும் வாழ்க்கை ஆகாது.

"அதைப்பற்றி - இதைப்பற்றி - கொள்கை, அது, இது" என்பன போன்றவற்றிலிருந்து மிகவும் எச்சரிக்கையாக இருங்கள். ஒருவன் எப்பொழுதும் "அதைப்பற்றி - இதைப்பற்றி" சிந்தித்துக்கொண்டு இருக்கலாம். கடவுளைப் பற்றி பலவாறாக சிந்தித்துக்கொண்டிருக்கும் மக்கள் ஏராளம். அதேபோல வாழ்வைப் பற்றியும் சிந்தித்துக்கொண்டே இருப்பவர்கள் பல கோடி.

அதேபோல அன்பு, காதலைப் பற்றி சிந்தித்துக் கொண்டு இருப்பவர்கள் அநேகம். இப்படிப்பட்ட மக்களின் வேலை எப்பொழுதும் - இதைப்பற்றி - அதைப்பற்றி சிந்தித்துக்கொண்டே இருப்பதுதான்.

முல்லா நசுருதீன் மிகவும் வயதாகி இளைத்து விட்டார். அவரைப் பார்த்த டாக்டர், "நான் ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். அதாவது நீ உன் காதல் வாழ்வை சரிபாதியாக ஒதுக்கிவிடவேண்டும்" என்றார்.

அதற்கு முல்லா, "சரி, ஆனால் எந்த பாதி? அதைப்பற்றி பேசுவதில் பாதியா அல்லது அதைப்பற்றி சிந்திப்பதில் பாதியா?" என்றார்.



ஆகவே நீங்கள் ஒரு மொழி ஆசிரியனாகவோ, ஒரு கிளிப் பிள்ளையாகவோ மாறிவிடாதீர்கள். இப்படிப் பட்டவர்கள் தங்கள் வார்த்தை ஜாலத்திலும் கொள்கை விளக்கத்திலும் மட்டும் வாழ்பவர்கள். வாழ்வு மெல்ல மெல்லச் சென்று கொண்டு இருக்கும்பொழுது அது இவர்களது கைகளிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக நழுவிக்கொண்டே சென்றுவிடும். பிறகு ஒருநாள், திடீரென்று மரண பயம் தோன்றும்.

ஒரு மனிதன் மரணத்தைக் கண்டு பயந்தால் அவன் தன் வாழ்வை தொலைத்துவிட்டவன் என்று அறிந்து கொள்ளுங்கள். அவன் தன் வாழ்வில் பூரணமாக வாழ்ந்திருந்தால் மரணத்தைப் பற்றி அவனுக்கு எந்தவித பயமும் இருக்காது. அவன் உண்மையாக வாழ்ந்திருந்தால், மரணத்திலும் வாழத் தயாராகிவிடுவான். அப்போது மரணத்தின் முழுமை, அவனுக்கு ஒரு புதிய உற்சாகத்தைக் கொடுக்கும்.

சாக்ரடீஸ், தன் மரணப்படுக்கையில் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். அதன் காரணம் அவரது சீடர்களுக்குப் புரியவில்லை. கிரேட்டோ என்ற சீடன், மிகுந்த குழப்பம் அடைந்து, "குருவே நீங்கள் எதற்காக இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள்?" என்று வினவினான். அதற்கு சாக்ரடீஸ், "நான் ஏன் மகிழ்ச்சியாக இருக்கக்கூடாது? எனக்கு என்ன வாழ்வு என்ன என்பது தெரியும். இப்பொழுது மரணம் என்ன என்பதை அறியச் செல்லுகிறேன். இதை விளங்கிக்கொள்ள முடியாத அந்த நிகழ்ச்சியின் வாயிலில் தற்போது நிற்கிறேன். எனக்கு மிகுந்த உற்சாகமாக இருக்கிறது.

"நான் இதுவரை அறிந்திராத ஒன்றினுள் நுழைய இருக்கிறேன். என்னுள் ஓர் ஆச்சரியம் நிகழ இருக்கிறது.

இதற்குமேல் என்னால் தாமதிக்க இயலாது" என்றார். இதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். சாக்ரடீஸ் ஒரு மதவாதி அல்லர். அவர் எதையும் ஒருபோதும் நம்பியது இல்லை.

சாக்ரடீஸிடம் ஒருவர், "மரணத்திற்குப்பின் ஆத்மா வாழும் என்று உங்களால் தீர்மானமாகக் கூறமுடியுமா?" என்று கேட்டார். அதற்கு அவர் "எனக்குத் தெரியாது" என்றார்.

"எனக்குத் தெரியாது" என்று ஒருவர் இந்த உலகத்தில் சொல்ல மிகுந்த தைரியம் தேவை. ஒரு மொழி ஆசிரியன் "எனக்குத் தெரியாது" என்று சொல்ல மிகுந்த கஷ்டப்படுவான். ஆனால் சாக்ரடீஸ் மிகுந்த நேர்மையான மனிதர். அதனால்தான் அவரால் "எனக்குத் தெரியாது" என்று தைரியமாகச் சொல்ல முடிந்தது.

பிறகு அந்த சீடர் மறுபடியும் கேட்டார். "ஆத்மா மரணத்துக்குப்பின் வாழவில்லை என்றால் நீங்கள் எதற்காக இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள்?".

அதற்கு சாக்ரடீஸ், "நான் இறந்த பிறகுதான் அதைத் தீர்மானிக்க வேண்டும். ஆத்மா மரணத்திற்குப்பின் வாழ்ந்தால் எனக்கு மரணத்தைப் பற்றி எந்த பயமும் கிடையாது. அது அப்புறம் வாழவில்லை என்றால், எனக்கு எப்படி பயம் தோன்றும்? ஏனெனில் என் ஆத்மா வாழவில்லையென்றால் நானே வாழவில்லை என்று அர்த்தம்" என்றார்.

"ஆகவே அதுபற்றி பயப்பட ஒன்றும் இல்லை. இப்பொழுது என்னால் என் ஆத்மாவுக்கு என்ன நேரிடும் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. ஆகவேதான் அதை அறியும் ஆவலில் அந்நிகழ்ச்சியைச் சந்திக்கத் தயாராக இருக்கிறேன். எனவேதான் இந்த நிலையில் எனக்கு அதுபற்றி ஒன்றும் தெரியாது என்று சொன்னேன்" என்றார்.



என்னைப் பொறுத்தமட்டில் ஒரு தெய்வ நம்பிக்கை உள்ள மனிதன் இப்படித்தான் இருப்பார். தெய்வ நம்பிக்கை உள்ளவன் ஒரு கிறிஸ்துவனாகவோ, ஓர் இந்துவாகவோ அல்லது முகமதியனாகவோ இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

இந்த முத்திரைகள், உங்களுடைய விஷய ஞானத்தை அதிகரிக்க மட்டுமே உதவும். ஒரு கிறிஸ்துவன் "எனக்குத் தெரியும்" என்று சொன்னால் அவனுக்கு விஷயம் கிறிஸ்தவ நூல்களிலிருந்து வந்ததாகத்தான் இருக்க முடியும்.

அதேபோல் ஓர் இந்துவுக்கு கீதை, வேதம் போன்ற நூல்களிலிருந்து வந்ததாகத்தான் இருக்க முடியும். ஒரு இந்து, கிறிஸ்துவனுக்கு மாறாகவே இருப்பான். ஏனெனில் அவன் "நான் சரியாகச் சொன்னால் நீ சொல்லுவது சரியாக இருக்காது. அதேபோல நீ சரியானது என்று சொன்னால் என்னுடையது சரியாக இருக்காது" என்பான்.

ஆகவே இதைப்போல பல வாதப்பிரதிவாதங்கள், சண்டைகள், சச்சரவுகள், பட்டிமன்ற விளக்கங்கள் நடந்துகொண்டேதான் இருக்கும்.

ஓர் உண்மையான தெய்வ நம்பிக்கை உடையவன்- நான் குறிப்பிடுவது உலகத்தில் தன்னை ஒரு மதவாதி என்று சொல்லுபவர்களை அல்ல - யாரென்றால் தனக்குத் தெரியாதவற்றை தைரியமாக "எனக்குத் தெரியாது" என்று கூறுபவனே. "எனக்குத் தெரியாது" என்று நீங்கள்

சொல்லும்பொழுது, நீங்கள் ஒளிவு மறைவு இல்லாமல் இருக்கிறீர்கள்.

நீங்கள் அதைக் கற்றுக்கொள்ள அதைப் புரிந்து கொள்ள ஆவலுடன் இருக்கிறீர்கள், நீங்கள் எனக்குத் தெரியாது என்று சொல்லும்பொழுது அதைப்பற்றி எந்த அபிப்ராயமும், எந்த நம்பிக்கையும், எந்தவிதக் கருத்தும் இல்லாமல் இருக்கிறீர்கள் என்று அர்த்தம்.

அப்பொழுது உங்களிடம் விழிப்புணர்வு மாத்திரம் தான் இருக்கிறது. நீங்கள் "என்ன நேரிடப்போகிறது என்று நான் விழிப்புடன் இருக்கிறேன். என்னுடைய இறந்த காலத்திலிருந்து எந்தவிதக் கருத்துகளையும் எடுத்துச்செல்ல மாட்டேன்" என்று கூறுங்கள்.

ஒரு சீடனின் இயல்பு மேற்படி இருந்தால், அவன் கற்க வேண்டியதைக் கற்றுக்கொள்ளுவான். அடக்கம் ஒழுங்கு என்றால் கற்றுக்கொள்ளுதல், அறிந்துகொள்ளுதல் என்று அர்த்தம். சீடன் என்றால் கற்பவன், எதையும் கற்றுக் கொள்ளத் தயாராக உள்ளவன் என்று அர்த்தம்.

நான் இங்கு எந்தக் கொள்கையும் உங்களுக்குக் கற்றுத் தரப்போவது இல்லை. நான் உங்களுக்கு எந்த விஷயத்தையும் போதிக்க விரும்பவில்லை.

எதைப் பார்க்க வேண்டுமோ, எதை அறிய வேண்டுமோ, அதற்காக மட்டுமே நான் உதவி செய்கிறேன். எதை இழந்தாலும், உங்கள் உணர்வுமயான வாழ்க்கையை மட்டும் இழந்து விடாதீர்கள். அத்துடன் இணைந்து ஒரு புதிர் போல வாழுங்கள்.

நான் ஒரு வியாபாரியைப் பற்றி சொல்லுகிறேன். ஒரு வியாபாரி மதிய உணவு உட்கொள்ள ஒரு விடுதியை நோக்கிச் செல்லுகிறான். வழியில் ஒருவன் அவனை



நிறுத்தி, "என்னை உங்களுக்கு ஞாபகம் இருக்குமா என்று தெரியவில்லை. சுமார் பத்து வருடங்களுக்கு முன், இந்த நகரத்துக்கு வந்தேன். அப்போது உங்களிடம் கொஞ்சம் பணம் கடன் கேட்டேன். நீங்கள் 20 டாலர் கொடுத்து உதவினீர்கள்.

அப்பொழுது நீங்கள், 'ஒரு மனிதன் வெற்றிப் பாதையில் செல்ல இது வழி வகுக்கட்டும்' என்று வாழ்த்திக் கொடுத்தீர்கள்'' என்றான். அதற்கு அந்த வியாபாரி, சிறிது யோசித்துவிட்டு, "ஆமாம். எனக்கு ஞாபகம் வந்துவிட்டது. அப்புறம் சொல்லுங்கள்" என்று ஆவலுடன் கேட்டார். அதற்கு அந்த ஆள், "நல்லது, இப்பொழுதும் அதைப்போல ஒரு சந்தர்ப்பம் எனக்குக் கொடுக்க விரும்புகிறீர்களா?" என்றான்.

வாழ்க்கை, உங்களிடம் திரும்பத் திரும்ப இதே கேள்வியைத்தான் கேட்டுக்கொண்டு இருக்கிறது. "நீங்கள் வாழ்வதற்கு மீண்டும் தயாராக இருக்கிறீர்களா?" என்று உங்களிடம் கேட்டுக்கொண்டே இருக்கிறது.

ஆனால், அதற்கு எந்த ஒரு நிச்சயத்தன்மையும் கிடையாது. அதற்கு எந்தவித இன்சூரன்சும் கிடையாது. அது ஒருபெரிய திறந்தவெளி. ஓர் ஒழுங்கற்ற வெளி. நீங்கள் அதில் ஒரு சிறிய வீட்டைக் கட்டிக்கொண்டு பாதுகாப்பாக இருக்கலாம். ஆனால் அதுவே பிறகு உங்களுடைய சமாதி ஆகிவிடும் ஜாக்கிதை. ஆகவே, வாழ்வோடு இணைந்து வாழ முற்படுங்கள்.

ஆனால் வாழ்வில் வாழ நாம் பல வழிகளைக் கடைப்பிடிக்கிறோம். இதில் 'திருமணம்' என்பது மனிதனால் உருவாக்கப்பட்டது. ''அன்பு'' என்பது வாழ்வின் ஒரு பிரிக்க முடியாத அங்கம். திருமணம் என்பது,

அந்த காதலைச் சுற்றி போடப்படும் ஒரு பாதுகாப்பான வேலி. அது மிகவும் செயற்கைத் தன்மை உடையது. ஏனெனில், அன்பு, காதல் இவற்றை, நீங்கள் சட்டமாக்க முடியாது.

ஒரு முடியாத காரியத்தில் நீங்கள் இறங்கி ஏதோ செய்கிறீர்கள். இந்த செயற்கையான முயற்சியில், அவை இருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நீங்கள் ஒரு கணவனாக இருக்கலாம். உங்களுடைய காதலி, பிறகு உங்களுடைய மனைவி ஆகலாம். நீங்கள் இருவரும் பிறகு சுதந்திரமாக இருவேறு செயல்கள் செய்யும் உயிரோட்டமான ஜீவனாக இயங்க முடியாது.

கணவனுக்கு என்று சில கடமைகள், மனைவிக்கு என்று சில கடமைகள் நிறைவேற்ற வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகிறீர்கள். அப்பொழுது வாழ்வின் உயிரோட்டம் தடைப்பட்டு, முடக்கப்படுகிறது.

ஒரு தம்பதியை சற்று கவனித்துப் பாருங்கள். இரண்டு தனித்தனி நபர்கள், எந்தவித உணர்ச்சியும் இல்லாமல் அருகருகில் உட்கார்ந்துகொண்டு மேற்கொண்டு என்ன செய்வது என்று தெரியாமல் எதற்காக உட்கார்ந்து இருக்கிறோம் என்றுகூட தெரியாமல் இருப்பதைக் காணலாம். ஒருக்கால் அவர்களுக்கு எங்கேயும் செல்ல இடமில்லையோ என்னமோ!

இரண்டு பேர்களிடம் உண்மையான அன்பு ஏற்பட்டுள்ளதைப் பார்த்தால் ஏதோ ஒன்று மாறிமாறி நிகழ்வதை, ஓர் உணர்வு ஓட்டத்தைக் காணலாம்.

அந்த அன்பின் சங்கமத்தில் அவர்கள் பரவச உணர்வில் வாழ்வதைக் காணலாம். அந்த அன்பின் பரிமாற்றத்தில் ஓர் இயல்பான ஓட்டம் இருக்கும். அந்த அன்பின் அலைகள்



ஒருவரிடமிருந்து மற்றவருக்கு மாறி மாறி இயங்குவதைக் காணலாம். தங்களுடைய உயிர்த்தன்மை அவர்களுக்குள் பேசுவதை உணரலாம். அவர்களுக்கு இடையில் எந்த சுவரும் கிடையாது. பார்ப்பதற்கு அவர்கள் இருவேறு நபர்களாக இருந்தாலும் உண்மையில் அவர்கள் ஒருவரே.

ஒரு தம்பதியர் அருகருகே அமர்ந்திருந்தாலும் உயிரோட்டத்தின் உணர்வைப் பொறுத்தவரையில், அவர்கள் இருவரும் வெகு தூரம் தள்ளியே இருக்கிறார்கள். மனைவியின் பேச்சைக் கணவன் கேட்பதில்லை. அவளைப் பொறுத்தவரையில் அவன் காதுகள் எப்பொழுதோ செவிடாகிவிட்டன. அதேபோல் தன் கணவனுக்கு என்ன தேவை என்பதை மனைவி உணர்வதே இல்லை. அவனைப் பொறுத்த வரையில், அவளுடைய கண்கள் குருடாகி விட்டன.

ஆனால், இருவரும் இந்த செயற்கை வாழ்க்கையை அனுமதித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் இருவரும் உயிரற்ற ஜீவன்கள்; அவ்வளவுதான். அவர்கள் வாழவில்லை. ஏனெனில் உண்மையில் வாழ்க்கையை வாழ்பவன் கள்ளங்கபடு இல்லாமல் அதேசமயம் தீர்மானிக்க முடியாதவனாகவும், மாறக்கூடிய தன்மை உள்ளவனாகவும் இருப்பான்.

ஆனால் தம்பதியர்கள் ஒருசிலவற்றை கட்டாயமாக நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் என்றைக்குத் திருமணம் செய்து கொண்டார்களோ அன்றைக்கே தங்கள் உள் உணர்வைப் பொறுத்தவரையில் இறந்தவர்களாக ஆகிவிட்டார்கள். அந்த நாள் முதல் அவர்கள் உண்மையாக வாழவில்லை.

இப்படி நான் கூறும்போது நீங்கள் திருமணமே செய்து கொள்ளக்கூடாது என்று நான் சொல்ல வரவில்லை.

ஆனால் ஒன்றை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். 'அன்பு' தான் உண்மையானது. அன்பு ஊற்று அங்கு வற்றிவிட்டால், திருமணம் அர்த்தமற்றதாகிவிடும்.

அதேபோல்தான், வாழ்வில் சகலமும். ஒன்று, நீங்கள் உண்மையாக வாழ முடியும். அதாவது அடுத்து என்ன நேரிட இருக்கிறது என்று புரிந்துகொள்ள முடியாமல், ஒரு தயக்கத்தோடு ஒரு விழிப்புணர்வோடு வாழ்வது; அல்லது எல்லாவற்றையும் நிச்சயம் செய்துகொண்டு, அதன்படியே வாழ்வது.

எல்லாவற்றையும் நிச்சயம் செய்துகொண்டு, கணக்குப் பார்த்துக்கொண்டு வாழ்ந்தால் வாழ்வில் ஆச்சரியம், உற்சாகம் என்பதே இருக்க முடியாது. அவர்களைப் பார்த்து நீங்களும் ஆச்சரியப்பட முடியாது.

நான் உங்களுக்கு ஓர் ஆச்சரியமான செய்தியை கூறப்போகிறேன். உங்களால் அதை நம்பவே முடியாது. இருந்தும் சொல்லுகிறேன். அதாவது நீங்கள்தான் கடவுள்- சக்தி- சிவம் எல்லாம். ஆனால் நீங்கள் இந்த உண்மையை மறந்து இருக்கிறீர்கள்.

ஒரு கதை சொல்லுகிறேன் -

ஒரு பனிக்காலத்தில், அமெரிக்காவில் உள்ள ஃபுளோரிடா (Florida)வுக்குச் செல்லும் வழியில் ஹார்னி ஃபயர்ஸ்டோன் (Harney Firestone), தாமஸ் ஆல்வா எடிசன் (Thomas Alva Edison), ஜான் புரூக் (John Buroughs), மற்றும் ஹென்றிஃபோர்டு (Henry Ford) ஆகிய நால்வரும் ஓர் கார் மெக்கானிக் கடையில் தங்கள் காரை நிறுத்தி அந்தக் கடை ஆளிடம் ஃபோர்டு: "காரின் முன் லைட்டுக்கு பல்ப் வேண்டும்" என்று கேட்டார். பிறகு தொடர்ந்து அவர், "நான்தான் ஹென்றிபோர்டு,



காரில் தாமஸ் ஆல்வா எடிசனும் இருக்கிறார்" என்றார். அதற்கு அந்த ஆள் மிக அலட்சியமாக, தன் புகையிலை எச்சிலைத் துப்பிக்கொண்டே வெறுமனே அவரைப் பார்த்தான்.

பிறகு ஃபோர்டு, "ஃபயர்ஸ்டோன் (Firestone) டயர் இருந்தால் ஒன்று வாங்கிக்கொள்ளுகிறோம். அதோ காரில் உட்கார்ந்திருக்கும் இன்னொருவர் ஹார்னி ஃபயர்ஸ்டோன்தான்" என்று அறிமுகம் செய்தார்.

இதற்கும் அந்த வேலையாளிடமிருந்து எந்த உணர்ச்சியும் இல்லை. பிறகு அவன் காருக்கு புதிய டயரைப் பொருத்தும்பொழுது ஜான்புரூக், தன் நீண்ட வெண்தாடியுடன் காரின் ஜன்னலுக்கு வெளியே தன் தலையை நீட்டி, அந்த ஆளின் தலையில் லேசாகத் தட்டி, "ஹலோ சௌக்கியமா?" என்று விசாரித்தார்.

இப்பொழுது அந்த ஆள் உணர்வுபெற்று, புரூக்கைப் பார்த்து, "நீங்கள் சாண்டா கிளாஸ் என்று என்னிடம் சொன்னால், இந்த இரும்பு ஆயதத்தால், உங்களை நான் அடிக்காமல் விட்டால், நான் ஒரு முட்டாள்" என்றான்.

ஒரே காரில், மேற்கண்ட புகழ்பெற்ற நால்வரும் ஒன்றாக வரமுடியும் என்பதை அவனால் நம்ப இயலவில்லை. ஆனால் அவர்கள் நால்வரும் நண்பர்கள் தாம். எங்கே சென்றாலும், அவர்கள் நால்வரும் சேர்ந்தே தான் செல்லுவார்கள்.

அதேபோல் நீங்களே கடவுள்கள், நீங்களே சக்தியும், சிவனாகவும் இருக்கிறீர்கள் என்று நான் சொல்லும் பொழுது உங்களால் நம்ப இயலவில்லை.

ஏனெனில் உங்களோடு யார் வருகிறார்கள், உங்களுக்குள் யார் அமர்ந்திருக்கிறார்கள், யார்

கேட்டுக்கொண்டிருக்கிறார்கள், யார் உங்களைப் பார்த்துக்கொண்டு இருக்கிறார்கள் என்பதை நீங்கள் மறந்து வெகுகாலம் ஆகிறது. நீங்கள் சுத்தமாக மறந்துவிடாதீர்கள்.

நீங்கள் பிறக்கும்பொழுது வெளிஉலகம் உங்களுக்கு ஒரு முத்திரைச் சீட்டு (Identity Card) கொடுத்து நீங்கள் அதுதான் உண்மை என்று நம்பிக்கொண்டு இருக்கிறீர்கள். உங்கள் பெயர், மதம், தேசம் எல்லாமே பொய்யே.

நீங்கள் உண்மையிலேயே யார் என்று அறிந்திரா விட்டால் நீங்கள் இந்துவானாலும் கிறிஸ்துவானாலும் அல்லது முஸ்லிமானாலும் எந்த அர்த்தமும் எந்தப் பயனும் அதனால் உண்டாகப் போவதில்லை.

உலகத்தில் ஏதோ சில காரியங்களுக்காக இந்த முத்திரைச்சீட்டு பயன்படலாமே ஒழிய, மற்றபடி அதற்கு எந்த அர்த்தமும் இல்லை. நீங்கள் கிறிஸ்தவன் அல்லது இந்து அல்லது முஸ்லிம் என்றாலும் அல்லது அமெரிக்கன் இல்லை இந்தியன், இல்லை சைனாக்காரன் என்றாலும் இதனால் என்ன பயன் உண்டாகப்போகிறது?

இவை உங்களை அறிவதற்கு எந்த வகையில் பயன்படும்? எல்லாமே அர்த்தமற்றவை. சம்பந்தம் இல்லாதவை. ஏனென்றால் உங்கள் ஆத்மா இந்தியனோ, அமெரிக்கன் அல்லது சைனாக்காரனோ அல்ல. அதேபோல் 'அது' இந்து இல்லை, முஸ்லிம் அல்லது கிறிஸ்து இல்லை. 'அது' அதுவாகவே இருக்கிறது.

அந்த சுத்தத் தன்மையையே நாம் கடவுள் என்று அழைக்கிறோம். நீங்கள் இந்தத் தெய்விகத் தன்மையை அறிந்துகொண்டால் நீங்கள் உண்மையான வாழ்வு என்ன என்பதை அறிந்தவர்கள் ஆவீர்கள். இல்லாவிட்டால்



உங்களால் வாழ்வைப் பற்றி ஒன்றுமே அறிந்துகொள்ள முடியாது. இதுதான் என்னுடைய செய்தி.

முழுமையான வாழ்வு எப்பொழுதும் ஒன்றைத்தான் சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கிறது. அது 'நீங்கள் கடவுள்' என்பதாகும்.

இதை நீங்கள் எப்பொழுது புரிந்துகொள்ளுகிறீர்களோ, அன்றைக்கே உங்களுக்கு மரணம் இல்லை. நீங்கள் உங்களது உண்மையான பாடத்தைக் கற்றுக்கொண்டவர்கள் ஆவீர்கள். பிறகு இந்த கடவுள்கள் (நீங்கள்) இறந்துவிட்டால் உங்களுடைய உண்மையான இருப்பிடத்திற்குத் திரும்பி வந்தவர்கள் ஆவீர்கள்.

ராபி பிர்ன்ஹம் (Rabbi Brinham), தன் மரணப் படுக்கையில் இருக்கும்பொழுது, அவரது மனைவி கண்ணீர்விட்டு அழுகிறாள். அதைப் பார்த்த அவர், "எதற்காக இப்படி அழுகிறாய்? என்னுடைய வாழ்வு முழுவதும், எப்படி நான் இறப்பது என்பதைக் கற்றுக்கொள்ளவே செலவழித்தது" என்றார்.

நீங்கள் உங்கள் உண்மையான வீட்டுக்கு எப்படி திரும்பிச் செல்லுவது, எப்படி உங்கள் மரணத்தை எதிர் நோக்குவது, எப்படி இந்த உலகத்திலிருந்து மறைவது என்பது பற்றியே, உங்களுடைய முழு வாழ்க்கை ஒரு "கற்றுக்கொள்ளுதலாக" விளங்கட்டும். ஏனெனில், நீங்கள் எந்த வினாடியில் மறைகிறீர்களோ, அந்த சமயம் உங்கள் உள்ளே உள்ள கடவுள் தானே தன்னை வெளிப் படுத்துகிறார்.

நீங்கள் இருக்கும்பொழுது, கடவுள் மறைந்திருக்கிறார். நீங்கள் மறையும்பொழுது, கடவுள் உதயமாகிறார்.





# 2
# குழப்புதலே என் வழி!

கேள்வி 1: "அன்புள்ள ஓஷோ! இறப்பதற்கு, நாங்களே எப்படித் தயார் செய்துகொள்வது?"

"எதையும் சேர்த்து வைக்க விரும்பாதீர்கள். அது, அதிகாரமாகட்டும், பணமாகட்டும், அந்தஸ்து, புண்ணியம், விஷய ஞானம், ஏன் உங்களுடைய ஆத்மீக அனுபவமாகட்டும். எதையும் என்னுடையது என்று சேர்த்து வைக்காதீர்கள்.

இப்படி எதையுமே சேர்த்து வைக்காவிட்டால், எந்த நேரமும், நீங்கள் இறப்பதற்குத் தயாராக இருப்பீர்கள்.

ஏனெனில் அப்பொழுது நீங்கள் எதையும் இழக்கப் போவது இல்லை. இறப்பைக் கண்டு யாரும் பயப்பட வில்லை. நீங்கள் வாழ்க்கையில் சேகரித்தவைதான் உங்களுக்கு மரண பயத்தை உண்டுபண்ணுகின்றன.

மரணம் நெருங்கும்பொழுது நீங்கள் இதுவரை உங்கள் சக்தியை எல்லாம் செலவழித்து சேகரித்த வற்றோடு ஒட்டிக்கொள்ளவே ஆசைப்படுகிறீர்கள்.

ஜீசஸ் சொன்ன "உங்களுடைய உயிர்த்தன்மை, எந்தவித சேர்த்து வைத்தல் இல்லாமல், எளிமையாக,



ஏன், வறுமையாக இருந்தால் அவர்களே ஆசீர்வதிக்கப் பட்டவர்கள் ஆவார்கள்" என்பதன் அர்த்தம் இதுதான்.

இதற்காக நான் உங்களை பிச்சை எடுத்து இந்த உலகத்தைத் துறந்து வாழுங்கள் என்று சொல்லவில்லை. நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், "நீங்கள் உலகத்திலேயே இருங்கள். ஆனால் நீங்களே உலகமாக மாறிவிடாதீர்கள்" என்பதே.

எதையும் உங்கள் மனதில் சேர்த்து வைக்காதீர்கள். உங்கள் உள்ளே, நீங்கள் வறுமையோடு இருங்கள். எதையும் என்னுடையது என்று சொந்தம் கொண்டாட தீர்கள். அப்பொழுது நீங்கள் எந்த துன்பமும் இன்றி இறக்கலாம்.

வாழ்க்கை உங்களுக்கு பிரச்சினை இல்லை. "என்னுடையது" என்ற எண்ணம்தான் பிரச்சினை. நீங்கள் எவ்வளவுக்கு அதிகமாக சேர்த்து வைத்திருக்கிறீர்களோ, அவ்வளவுக்கவ்வளவு நீங்கள் இறக்கும்பொழுது அவைகள் உங்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கும்.

உங்களுடைய ஆத்மா "என்னுடையது" என்பவற்றி னால் அசுத்தப்படுத்தப்படாமல் இருந்திருந்தால், சுத்தமாக, ஏன் வறுமையாக இருந்தால், நீங்கள் எந்த நேரமும் இந்த உலகத்தைவிட்டுச் செல்லலாம்.

இறப்பு உங்களை வந்து தட்டும்பொழுது நீங்கள் அதற்குத் தயாராக இருப்பதைக் கண்டு அதிர்ச்சி அடையும். நீங்கள் அப்பொழுது இழப்பதற்கு ஒன்றுமே உங்களிடம் இல்லை. அப்படி இருக்கும்பொழுது, வாழ்வு என்னும் அனுபவத்திலிருந்து இறப்பு என்ற புதிய அனுபவத்திற்குச் செல்லுகிறீர்கள். அவ்வளவுதான்.

நான் உங்களிடம், "நீங்கள் எதையும் சேர்த்து வைக்காதீர்கள்" என்று சொல்லுவதை உள்ளும் புறமும் ஓர் முழுமையான அர்த்தத்தில்தான் சொல்லுகிறேன்.

இந்த உலகத்துப் பொருள்களை மட்டுமின்றி நீங்கள் நினைக்கும் புண்ணியம், ஞானம், ஆத்மீக அனுபவங்கள், தெய்விகத் தோற்றங்கள் எல்லாவற்றையும் சேர்த்துத்தான் சொல்லுகிறேன். எதையும் உங்கள் மனதில் சேர்த்து வைக்காதீர்கள்.

சில பேர் முக்கியமாக கீழை நாட்டில் உள்ளவர்கள், "உலகத்தைத் துறந்துவிடுங்கள்" என்று போதிக்கிறார்கள். அவர்கள், "நீங்கள் எதையும் இந்த உலகத்தில் சேர்த்து வைக்காதீர்கள். அப்படி சேர்த்து வைத்தால், மரணம் அவற்றை எடுத்துச்சென்று விடும்" என்று போதிக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள், சாதாரண எளிய மக்களைவிட அடிப்படையில் மிகவும் பேராசை நிரம்பியவர்கள்.

அவர்களுடைய அபிப்ராயம் என்னவென்றால் இந்த உலகத்துப்பொருள்களை "என்னுடையது" என்று சேர்த்து வைக்காதீர்கள். அப்படி சேர்த்து வைத்தால், மரணம் அவற்றை சுலபமாக எடுத்துச்சென்றுவிடும். அதற்கு பதிலாக, புண்ணியம், நல்ல நடத்தைகள், நீதி வழுவாமை, விஷய ஞானம், உலக மற்றும் ஆத்மீக அனுபவங்கள், குண்டலினி போன்ற யோக அனுபவங்கள், தியானம், இது, அது என்று சேர்த்து வையுங்கள். இவை அனைத்தும் உலகப் பொருள்கள் அல்ல. இவற்றை மரணம் எடுத்துச்செல்ல முடியாது என்கிறார்கள்.

ஆனால் எதுவாக இருந்தாலும் எப்பொழுது என்னுடையது என்று சொந்தம் பாவிக்கிறீர்களோ,



அப்பொழுதே அது உங்களுக்குப் பயத்தை உண்டு பண்ணுகிறது. ஒவ்வொரு பொருளும், உங்களுக்குப் பயத்தைத்தான் உண்டு பண்ணுகிறது.

ஆகவே, எதையும் சேர்க்காமலிருந்தால், உங்களுடைய பயம் இயல்பாக மறைந்துவிடும். இந்த "உலகத்தைத் துறந்து விடுங்கள்" என்று பழைய மதவாதிகள் போல் நான் சொல்ல வரவில்லை. என்னுடைய சந்நியாசம் என்பது தெளிவாக ஒரு புதிய தன்மையில் பிறப்பது.

அது, "நீங்கள் இந்த உலகத்தில் இருங்கள். ஆனால் நீங்கள் அதுவாக மாறவேண்டாம்" என்று போதிக்கிறது. இப்படி நீங்கள் இருந்தால், மரணத்திற்கு எப்பொழுதும் தயாராக இருப்பீர்கள்.

ஆப்ரஹாம் ஆடம் (Abraham Adam) என்ற சூஃபி (Sufi) ஞானியைப் பற்றிச் சொல்லுகிறேன். அவர் முன்பு போக்காரா (Bokhara) நாட்டின் அரசராக இருந்தவர். பிறகு எல்லாவற்றையும் விட்டுவிட்டு, சூஃபி பிச்சைக்காரனாகி விட்டார்.

ஒரு சமயம் அவர் இன்னொரு சூஃபியோடு இருக்கும்பொழுது அந்த சூஃபியின் செயலைக் கண்டு குழப்பம் அடைந்தார். ஏனெனில் அந்த சூஃபி, எப்பொழுதும் தன் வறுமையைக் குறித்து சலித்தவாறே பேசிக் கொண்டிருந்தார். ஒருநாள் ஆடம் அவர்கள், "நீங்கள் இப்பொழுது உள்ள வறுமையைக் குறை சொல்லிக் கொண்டிருப்பதைப் பார்க்கும்பொழுது நீங்கள் அதை மிகவும் சுலபமாக அடைந்ததாகத் தெரிகிறது" என்றார்.

அதற்கு அந்த சூஃபி, "என்ன முட்டாள்தனமாகப் பேசுகிறாய்? எப்படி வறுமையை வாங்க முடியும்?" என்று

கோபமாகக் கத்தினார். அவருக்கு ஆடம் அவர்கள் ஒரு காலத்தில் அரசனாக இருந்தவர் என்று தெரியாது.

பிறகு ஆடம் அவர்கள், "நண்பனே, என் விஷயத்தில் நான் ஒரு சாம்ராஜ்யத்தையே கொடுத்துத்தான் இதை வாங்கினேன். அது மாத்திரமல்ல. இதற்காக என்னிடம் நூறு உலகங்கள் இருந்தாலும் கொடுத்திருப்பேன். ஏனெனில் இந்த நிலையின் தன்மை, மதிப்பு ஒவ்வொரு நாளும் என்னிடம் கூடிக்கொண்டே போகின்றன. ஆகவே, அதற்காக நான் நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஆனால் நீங்களோ அதற்காக வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்" என்றார்.

ஆகவே, உங்கள ஆத்மாவின் சுத்தத்தன்மை என்பது, அதன் வறுமை நிலையையே குறிக்கிறது. சுஃபி என்ற வார்த்தை சஃபா என்ற அராபிக் வார்த்தையிலிருந்து வந்தது. 'சஃபா' என்றால் சுத்தத்தன்மை என்று பொருள். சுஃபி என்றால் சுத்தமான இதயத்தை, ஆத்மாவை உடையவன் என்று அர்த்தம்.

சுத்தத் தன்மை என்றால் என்ன? நான் கூறுவதைத் தவறாக எண்ண வேண்டாம். அதாவது ஒழுக்கத் தன்மைக்கும், சுத்தத்தன்மைக்கும் சம்பந்தமே இல்லை.

ஒழுக்கக் கொள்கையுடன் அதை சம்பந்தப்படுத்த வேண்டாம். சுத்தத்தன்மைக்கும், ஒருவன் சுத்தமாக இருப்பதற்கும் சம்பந்தம் எதுவும் இல்லை.

இங்கு சுத்தத் தன்மை என்றால் உங்கள் மனம் மாசுபடியாமல் எண்ணப் புகையால் சூழாமல் இருக்கும் நிலையையே குறிக்கும். அங்கு உங்கள் விழிப்புணர்வு மட்டும்தான் இருக்கும். வேறு ஒன்றும் இருக்காது. வேறு எதுவும் அதை உண்மையாகவே ஊடுருவ முடியாது.



ஆனால், நீங்கள் 'என்னுடைய, நான்' என்ற தன்மையில் இயங்கினால் உங்கள் மனம் மாசு படிந்ததாகி விடும். தங்கம் எப்படி உங்கள் உள்ளுணர்வுக்குள் செல்ல முடியும்? எந்த வழியும் கிடையாது. அதேபோல் உங்கள் பணமும் உங்கள் மைய உணர்வுக்கு வர முடியாது.

ஆனால் அந்தத் தங்கத்தையும் பணத்தையும் 'என்னுடையது' என்று விடாமல் பற்றிக்கொண்டிருந்தால் 'பற்று' உங்கள் உள் உணர்வுக்குள் மிகச் சுலபமாகச் செல்லும். உங்கள் ஆத்மாவை களங்கப்படுத்திவிடும். அப்பொழுது உங்கள் ஆத்மா வறுமை நிலையில் இருக்காது. இப்பொழுது பணம் தங்கத்துடன் இருக்கும்!

ஆகவே நீங்கள் பயப்படாமல் இருக்க வேண்டுமென்றால் முக்கியமாக மரணத்தைக் கண்டு பயப்படாமல் இருக்க வேண்டுமென்றால், நீங்கள் எதற்கும் சொந்தம் பாராட்டாமல் இருக்க வேண்டும். அப்பொழுது மரணம்கூட ஓர் அழகான அனுபவமாக இருக்கும்.

இந்த மரண அனுபவம், ஓர் உண்மையான ஆத்மீகவாதிக்கு அடிக்கடி ஏற்படும். ஆகவே, அவன் எதையுமே என்னுடையது என்று சேர்த்து வைக்க ஆசைப்பட மாட்டான்.

அப்படி ஏதும் தானாக வந்தால் அதை அனுமதித்து அப்பொழுதே மறந்துவிடுவான். அதைப்பற்றி மீண்டும் நினைக்கவே மாட்டான். அதைத் தன் எதிர்கால கனவுகளாகக் காணமாட்டான். அதற்காக மீண்டும் மீண்டும் பிரார்த்தனை செய்யமாட்டான்.

அத்துடன் அதன் தொடர்பு முடிந்துவிட்டது. அவ்வளவுதான். வேறு எதுவும் புதிதாக வந்தால் ஏற்றுக்

கொண்டு அதையும் அப்பொழுதே விட்டுவிட்டு மறந்து விடுவான். பழையவற்றைப் பற்றி அவன் எந்த கவலையும் கொள்ளமாட்டான்.

நீங்கள் பழையவற்றை சுமக்காமல் இருந்தால், நீங்கள் எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும், புதுமையான நிலையிலும் இருப்பீர்கள்.

அப்பொழுது உங்கள் வாழ்வின் ஒவ்வோர் அடியும் புதுமை நிரம்பியதாக இருக்கும். வாழ்வு அன்று மலர்ந்த மலர்போல் புதுமைப்பொலிவுடன் தோன்றும்.

ஆனால் உங்கள் மனம் எப்பொழுதும் பழைமையோடு தான் இருக்கும். அந்தப் பழைமை நிரம்பிய மனத்துடன் நீங்கள் வாழ்வை எதிர்கொண்டால், அந்த வாழ்வும் பழமை நிரம்பியதாகவே, அடுத்தடுத்து அதேபோல நேருவதாகவே தோன்றும்.

அப்பொழுது அது உங்களுக்கு அலுப்பைத்தான் கொடுக்கும். மனம் என்றாலே இறந்தகால எண்ணங்கள், விஷய ஞானங்கள் எல்லாம்தான்.

நீங்கள் எதையெல்லாம் வாழ்க்கையில் சந்தித்து அனுபவப்பட்டு வந்து பிறகு அதையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ, அதுதான் உங்கள் மனம் எனப்படுவது.

இறந்த காலத்தின் தூசுதான் மனம். அந்தப் பற்றே உங்கள் மனம். அந்த தூசு உங்கள் ஆத்மா அல்லது விழிப்புணர்வு என்ற கண்ணாடியில் படிந்திருக்கிறது. அந்த மனதோடு நீங்கள் எதைப் பார்த்தாலும் அதன் உண்மை வடிவம், உண்மைத்தன்மை விளங்காது. மாறுபட்டுக் காண்பிக்கும் தன்மையே மனத்தின் குணம்.



நீங்கள் மனதைக்கொண்டு, வாழ்க்கையைப் பார்க்காமல் இருந்தால் அந்த வாழ்வு சொர்க்கமாகத் தோன்றும். அப்பொழுது அது இறவாத் தன்மை உடையதாகத் தோன்றும். உங்கள் மரணத்திற்குத்தான் மரணம் உண்டு.

மனம் இல்லாவிட்டால் உங்களுக்கு இறப்பு என்பதே இல்லை. மனம் இல்லாமல் வேறு எதுவும் இறப்பது இல்லை. வாழ்வு போய்க்கொண்டேதான் இருக்கும். அதற்கு முடிவே இல்லை: அதேபோல் ஆரம்பமும் இல்லை.

ஆனால் நீங்கள் சேர்க்க ஆரம்பித்தால் அதற்கு ஆரம்பமும் உண்டு. முடிவும் உண்டு.

ஆகவே, நீங்கள் மரணத்தை சந்திக்க என்ன செய்ய வேண்டும்? இப்படி நான் சொல்லும்பொழுது, உங்களின் உடலில் முடிவான மரணத்தைப் பற்றிக் கூறவில்லை. அது வெகுநாள் கழித்து நிகழக்கூடியது.

நான் சொல்லும் மரணம் என்னவென்றால், நீங்கள் மூச்சை வெளியே விடும்பொழுது நேரும் அந்த மரண அனுபவத்தைத்தான். அது ஒவ்வொரு நிமிடமும் உங்களுக்கு ஏற்படுகிறது. அந்த மரணத்தை கவனியுங்கள். அதை உண்மை என்று ஏற்றுக்கொள்ளுங்கள். அப்படி இயல்பாக ஏற்றுக்கொண்டால் அந்த கடைசி மரணத்தையும் வெகு இயல்பாக ஏற்றுக்கொள்ளுவீர்கள்.

ஆகவே ஒவ்வொரு நிமிடமும் இறந்து, கடந்து, மறந்து வாழுங்கள். இப்படியே உங்களைச் சுத்தப்படுத்திக் கொண்டு மேலே செல்லுங்கள். தெரிந்தவற்றில் இறப்பைக் காணுங்கள். அப்பொழுதுதான் தெரியாதவற்றை புத்துணர்வுடன் வரவேற்பீர்கள்.

இப்படி இறந்து மீண்டும் மீண்டும் பிறப்பதில்தான், நீங்கள் வாழ்வில் பூரணமாக வாழ முடியும். அதேபோல் மரணத்தையும் எதிர்கொள்ள முடியும்.

இதுதான் உண்மையான ஆத்மீகத்தின் அடிப்படைத் தன்மை. மரணத்திலும், வாழ்விலும் ஓர் பூரணத்துவத்தை அனுபவிக்க வேண்டும். இரண்டிலும் ஓர் முழுமையை உணர வேண்டும். மிச்சம் மீதி என்று எதுவும் விட்டுவிடக் கூடாது.

அப்படி முழுமையாக இரண்டிலும் வாழ்ந்தால் பிறகு இவற்றை எளிதில் கடந்து செல்ல முடியும். அந்த முழுமையான நிலையில் இந்த இருவேறு (Duality), மாறுபட்ட தன்மைகளை விட்டு மேலே சென்று, நீங்கள் ஒருமையில் ஐக்கியமாகி விடுவீர்கள்.

அந்த ஒருமைதான் உண்மை. அதை நீங்கள் கடவுள் என்றோ, வாழ்வு என்றோ, சமாதி என்றோ அல்லது பேரின்பம் என்றோ அல்லது உங்கள் இஷ்டப்படி எப்படி வேண்டுமானாலும் அழைத்துக்கொள்ளுங்கள்.

**கேள்வி 2: "அன்புள்ள ஓஷோ! சில நேரங்களில் யோகம், அன்பு இவற்றைப் பற்றி நீங்கள் சொல்லுவது சிறுகுழப்பத்தை உண்டு பண்ணுகிறது. சிலசமயம் அன்பு முடிவில் பயனற்றது என்று வலியுறுத்துகிறீர்கள். மற்றொரு சமயம், யோகமும் முடிவில் பயனற்றது என்று கூறுகிறீர்கள்! பிறகு அன்பும், யோகமும், ஞானம் பெறுவதற்கு அடிப்படையான இரண்டு வழிகள் என்றும் கூறுகிறீர்கள். தயவு செய்து விளக்கவும்."**

இந்த கேள்வியைக் கேட்டவர் "நீங்கள் எங்களை சில சமயம் குழப்ப முயற்சி செய்வதுபோல் தோன்றுகிறது" என்றார்.



"இல்லை. நான் சொல்லுவதை, நீங்கள் சரியாகக் கேட்கவில்லை. நான்தான் எப்பொழுதும் குழப்பிக் கொள்ளுகிறேன். ஒருசில சமயங்களில் மட்டும் அல்ல. கிட்டத்தட்ட எப்பொழுதுமே அதுதான் என் வழியாக இருக்கிறது.

நான் உங்களை குழப்பத்தில் ஆழ்த்துவதன் மூலம் உங்களை உங்கள் மனதிலிருந்து விடுதலை செய்ய முற்படுகிறேன். கடவுளின் பெயராலோ அல்லது அன்பின் பெயராலோ, யோகத்தின் பெயராலோ உங்கள் மனதில் எந்த வேரையும் படர விட நான் விரும்ப வில்லை.

உங்கள் மனம் மிகவும் தந்திரமானது. அது அன்பு, யோகம் போன்று எதன் மேலும் நிலைத்து உயிர் பெற்றுவிடும் தன்மை உடையது. உங்கள் மனம் ஏதாவது ஒன்றின்மேல் வேர்விட ஆரம்பிப்பதைப் பார்க்கும் பொழுது அதை எடுத்து எறிய முற்படுகிறேன்.

உங்களிடம் ஒரு மனமற்ற நிலையை உண்டாக்குவதே என் முழு வேலை ஆகும். உங்களிடம் எந்த சமாதானத்தை யும் ஏற்படுத்துவதற்காக நான் இங்கு இல்லை. வாழ்வதற்கு ஒரு கொள்கை வகுக்கவோ அல்லது ஆசையைத் தாண்டவோ நான் இங்கு இல்லை.

உங்களிடமுள்ள எல்லா ஆசைகளையும் எடுக்கவே நான் இங்கு இருக்கிறேன். ஏனெனில் அப்பொழுதுதான் வாழ்வு உங்களிடம் நிகழ முடியும். நீங்கள் வாழ்வதற்காக நான் எதையும் உங்கள் மேல் திணிக்க விரும்பவில்லை. வாழ்வின் ஆதாரங்களை நான் உங்களிடமிருந்து எடுத்து எறிகிறேன்.

மனம் மிகவும் தந்திரமானது. "பணம் வேண்டாம்" என்று நீங்கள் சொன்னால், உடனே உங்கள் மனம் "நல்லது. நான் தியானத்தைப் பிடித்துக்கொண்டு இருக்கிறேன்" என்று சொல்லும். "இந்த உலகத்தைத் துற" என்று சொன்னால், உங்கள் மனம், "நல்லது. நான் ஆத்மீக அனுபவத்தை மட்டும் வைத்துக்கொள்ளவா?" என்று கேட்கும்.

நீங்கள் மறுபடியும் "இந்த உலகத்தை முழுவதும் துற" என்று கூறினால், அது, "நான் இந்த உலகத்தைத் துறக்கிறேன். ஆனால் கடவுளைப் பற்றிய எண்ணங்களில் மட்டும் வாழ்கிறேன்" என்று சொல்லும்.

கடவுளை அடைவதற்கு, கடவுளைப் பற்றிய எண்ணங்களைத் தவிர வேறு எதுவும் பெரிய தடையாக இருக்க முடியாது. கடவுள் என்ற வார்த்தையும் கடவுள் நம்பிக்கை போன்ற எண்ணங்கள்தான் கடவுளை அடைய பெரிய தடையாக இருக்கின்றன.

ஆகவே கடவுளைப் பற்றிய சகல எண்ணங்களையும் இந்து, கிறிஸ்துவன், முஸ்லிம் சொல்லும் நம்பிக்கைகளையும் முதலில் கைவிடுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் கடவுளை அடைய முடியும்.

எதன் பின்னேயும் நீங்கள் தொக்கி நிற்காமல் எதையும் தெரிந்துகொள்ள ஆசைப்படாமல் பூரண அமைதியாக இருந்தால் - அந்த பரிபூரண அஞ்ஞான நிலையில் - இந்த நிலையில் மட்டும்தான்- கடவுள் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுகிறார்.

உங்கள் முயற்சியிலிருந்து என்னுடையது முற்றிலும் மாறுபட்டது. நீங்கள் இங்கு என்ன செய்து கொண்டு



இருக்கிறீர்களோ, அதற்கு நேர்மாறாகவே நான் இங்கு செயல்பட்டுக்கொண்டு இருக்கிறேன்.

உங்களிடத்தில் 'ஒரு பரிபூரண ஆழ்ந்த அஞ்ஞான நிலையை - ஓர் அறிவற்ற நிலையை' உண்டுபண்ணுவதே என் வேலை. ஆகவேதான், நான் உங்களைக் குழப்ப வேண்டியதாகிறது. எப்பொழுது விஷய ஞானம் உங்களிடம் சேருவதை நான் பார்க்கிறேனோ, உடனே நான் அதன் மேல் பாய்ந்து அதை அழிக்க முயற்சி செய்கிறேன்.

என் அருகில் நீங்கள் இருந்துகொண்டு இருப்பதால் இதைப்போன்ற விஷய ஞான சேகரிப்பு என்பது நடக்காத காரியமென நீங்கள் மெல்ல மெல்ல கற்றுக்கொள்வீர்கள். அப்படிக் கற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில் இது உங்களை அமைதியாக இருக்கவிடாது. நீங்கள் எதன் மீதாவது தொக்கி நிற்க முற்பட்டால் நான் அதை அழிக்க முற்படுகிறேன். ஏன் என்றால், எந்த ஒரு பற்றோ, எந்த ஒரு நம்பிக்கையோ இல்லாமல் அல்லது வாழ்க்கை அனுபவத்திலிருந்து எந்த ஒரு தத்துவத்தையும் கொள்கையையும் வகுக்காமல் ஒரு நாள் நீங்கள் வெறுமனே என் பேச்சைக் கேட்க வேண்டும்.

நீங்கள் எப்படி கடல் அலைகளின் உறுமும் ஓசையை, ஆறு கடலுடன் சேரும்போது எழும் ஓசையை, பைன் மரத்தின் ஊடே காற்று செல்லும்பொழுது எழும் ஒலியை வெறுமனே காது கொடுத்து கேட்கிறீர்களோ, எப்படி பறவையின் ஓசையைக் கேட்கிறீர்களோ, அப்படி எந்தவிதக் கருத்தும் இல்லாமல் கேளுங்கள். அப்பொழுது நீங்கள் எந்தவித தத்துவங்களையும் உண்டாக்க மாட்டீர்கள். நீங்கள் வெறுமனே கேட்பீர்கள். அவ்வளவுதான்.

காலையில் ஒலிக்கும் பறவையின் பாட்டைப்போல மரங்களின் ஊடே செல்லும் காற்றின் ஒலியைப்போல நான் உங்கள் முன் கடவுளின் ஆண்மைமிக்க ஓசையாக ஒலிக்கிறேன்.

நான் உங்களிடம் எந்தவித விஷய ஞானத்தையும் திணிக்கும் ஒரு தத்துவ ஆசிரியன் அல்லன். விஷயங்களுக்கு அப்பால் உள்ள ஒன்றை உங்களுக்குக் காட்ட நான் முயற்சி பண்ணுகிறேன்.

எப்பொழுது நீங்கள் என் பேச்சைக் கேட்டு, தலையை அசைத்து, "ஆமாம். இது உண்மைதான்" எனறு சொல்லி விஷயங்களை சேகரிப்பதை நான் பார்க்கிறேனோ, அப்பொழுதே அதன் மேல் பாய்ந்து, அதை மறுத்து உங்களிடம் ஒரு குழப்பத்தை உண்டு பண்ண முனைகிறேன்.

நான் எப்பொழுதும் இதைத்தான் செய்து வருகிறேன். குழப்புவதுதான் என் வழி. ஒரு சங்கீதத்தைக் கேட்பவர்போல் மிகுந்த மகிழ்ச்சியுடன் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாமல் என் பேச்சைக் கேட்காதவரையில் நான் உங்களை அமைதியாக இருக்கவிடமாட்டேன்.

நீங்கள் அப்படி என் பேச்சைக் கேட்க ஆரம்பிக்கும் போதுதான் நீங்கள் உங்கள் குழப்பத்திலிருந்து விடுபடுவீர்கள். இந்தக் குழப்பம் உங்களிடம் ஏன் ஏற்படுகிறது என்றால் முதலில் நீங்கள் ஒரு விஷயத்தை மனதினால் பற்றுகிறீர்கள். பிறகு நான் அதை அழிக்கிறேன். அதனால்தான் இந்தக் குழப்பம். முதலில் நீங்கள் ஒரு வீட்டைக் கட்டுகிறீர்கள். பிறகு நான் அங்கு வந்து அதை கலைக்கிறேன்.



ஆகவே நீங்கள் உங்களிடம் ஒரு குழப்பத்தை உண்டு பண்ணிக் கொள்ளுகிறீர்கள். நான் வந்து அழிக்க முடியாத வீட்டை நீங்கள் கட்டுங்கள்.

நீங்கள் பேசாமல் எந்த வீட்டையும் - அது காகித வீடானாலும் - கட்ட முயற்சிக்காமல், வெறுமனே பேச்சை மட்டும் கேட்டுக்கொண்டிருந்தால் நான் உங்களை குழப்பமாட்டேன். என்றைக்கு நான் உங்களை குழப்புவதை நிறுத்துகிறேனோ, அன்று முதல் மிகுந்த மகிழ்ச்சியுடையவர்களாக ஆவீர்கள்.

ஏனெனில் அப்பொழுதுதான் நீங்கள் உங்கள் அறிவின் துணையில்லாமல் உங்களது ஆத்மாவின் மூலமாக உள் உணர்வின் மூலமாக என்னைப் பார்த்து உண்மையைப் புரிந்துகொள்வீர்கள்.

அது உயிர்கலப்பு நிகழ்ச்சி ஆகும். விஷய பரிமாற்றம் இல்லை. அது வெறும் வார்த்தைகளின் பரிமாற்றம் அல்ல; அது இரண்டு சக்திகளின் பரிமாற்றம். என்னுடைய வீட்டுக்கு நீங்கள் வரவேண்டும்.

ஆகவே நீங்கள் வீடு கட்டுவதை, நான் அனுமதிக்க மாட்டேன். அப்படி நான் அனுமதித்தால், நீங்கள் உங்கள் வீட்டிலேயே வாழ முற்படுவீர்கள். ஆனால் என் வீட்டுக்கு உங்களைக் கொண்டு வர நான் முயற்சி செய்கிறேன். இயேசு தன் சீடர்களிடம், "பல கட்டடங்கள் என்னுடைய கடவுளின் வீட்டில் இருக்கின்றன" என்றார். இதையேதான் நான் உங்களுக்குச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

உங்களுக்காக ஓர் அரண்மனை காத்துக்கொண்டு இருக்கிறது. அதை அடைய, உங்களை ஒரு நீண்ட

யாத்திரையில் செலுத்த நான் முயற்சிக்கிறேன். ஆனால் நீங்கள் அந்தப் பாதையின் பக்கத்திலேயே சிறிய வீடுகளைக் கட்டுவதை நான் பார்க்கிறேன். நான் அவற்றை அழிக்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் உங்கள் யாத்திரைக்கு முடிவே இருக்காது.

நீங்கள் ஒருபோதும் அதன் முடிவை அடைய மாட்டீர்கள். நீங்கள் எதையும் வணங்க ஆரம்பித்து விடுவீர்கள். நீங்கள் மிகுந்த அவசரத்திலும் பொறுமை இல்லாமலும் இருப்பதால் நான் எதைச் சொன்னாலும் உடனே நீங்கள் அதைப் பிடித்துக் கொள்ளுகிறீர்கள்.

இதை நான் அனுமதிக்கப் போவதில்லை. ஆகவே விழிப்போடு இருங்கள். நீங்கள் விழிப்போடு இருந்தால் உங்களை குழப்பத்தில் ஆழ்த்தத் தேவை இருக்காது. உண்மையாக நீங்கள் விழிப்போடு இருந்தால் நான் என்ன செய்தாலும் உங்களைக் குழப்ப முடியாது.

எப்பொழுது நீங்கள், "பகவான் இப்பொழுது நீங்கள் எங்களைக் குழப்ப முடியாது. நீங்கள் எதைச் சொன்னாலும் நாங்கள் வெறுமனேதான் கேட்போம். அதில் மகிழ்ச்சி அடைவோம். அதன் மூலம் எங்களுக்குள்ளே எந்தக் கருத்தும் உருவாக்கிக் கொள்ளமாட்டோம். எந்த வீட்டையும் கட்ட மாட்டோம்." என்று சொல்லுகிறீர்களோ, அப்பொழுது தான் நான் உங்களைக் குழப்ப முடியாது. அதுவரை நான் உங்களை மீண்டும் மீண்டும் குழப்பிக்கொண்டேதான் இருப்பேன்.



**கேள்வி 3: "அன்புள்ள ஓஷோ! தாம்பத்திய இன்பம் மரணத்தின் அருகிலேயே இருக்கும்பொழுது, இயற்கையான பிரம்மச்சரியம் என்றால் என்ன?"**

ஆண் - பெண் சேர்க்கை மரணத்தைவிட, பிறப்பில் தான் அதிக சம்பந்தம் உடையது. ஆண் - பெண் சேர்க்கையே பிறப்புக்குக் காரணம். ஆண் - பெண் சேர்க்கையின் முடிவு, பிறப்பின் ஆரம்பம். இவர்களின் இயற்கையிலேயே இது மரணத்தோடு மிக நெருங்கிய சம்பந்தம் உடையது. ஆனால் அந்த சம்பந்தம் ஒரு உட்பொருள் போலத்தான்.

ஏனெனில் ஆண்-பெண் சேர்க்கைதான் பிறக்கும் ஆதாரம். மரணம் என்பது அதன்பின் நிகழ்வது. ஆகவே நான், கீழை நாட்டு தத்துவவாதிகள், மனதுக்கு விளங்காத வகையில் சொல்லுவது என்னவென்றால், "நீங்கள் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்தால், உணர்வைத் தாண்டிச் சென்றால் உங்களுக்கு மரணமே இல்லை. நித்திய ஜீவர்களாக இருப்பீர்கள்" என்று.

இது ஒரு முட்டாள்தனமான வாதம். ஏனெனில் மரணம் என்பது பிறப்புடனேயே நிகழ்ந்துவிட்டது. அது எதிர்காலத்தில் நடக்கக்கூடிய ஒரு சம்பவம் அல்ல. நீங்கள் இதிலிருந்து தப்பிக்கவே முடியாது. நீங்கள் பால் உணர்வில் கலந்து இருந்தாலும், இல்லை அதை ஒதுக்கிவிட்டு, பிரம்மச்சரியனாக இருந்தாலும், அதில் எந்த வித்தியாசமும் இல்லை.

முல்லா நஸ்ருதீன், தன்னுடைய நூறாவது வயதை முடிக்கும்பொழுது, சில பத்திரிகையாளர்கள் வந்து அவரை பேட்டி கண்டார்கள். அந்த நகரத்தில் அவர்தான்

முதன்முதலில் நூறு வயதை எட்டியவர் என்று தெரிய வருகிறது.

அவரை, "நீங்கள் எப்படி இவ்வளவு நாள் வாழ்ந்தீர்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "நான் மது அருந்துவது இல்லை. பெண்களிடமும் எனக்கு விருப்பம் இல்லை. ஒருக்கால் அதுதான் காரணமாக இருக்கலாம்" என்றார்.

அப்பொழுது பக்கத்து அறையிலிருந்து ஏதோ சாமான்கள் விழும் சத்தமும், ஏதோ பறக்கும் சத்தமும் கேட்டன. நிருபர்கள் குழப்பத்துடன், "என்ன அது சத்தம்?" என்றார்கள்.

அதற்கு முல்லா, "அது வேறு ஒன்றும் இல்லை. என்னுடைய அப்பா குடித்துவிட்டு, வேலைக்காரியை துரத்துகிறாரோ என்னவோ?" என்று மிகச் சாதாரண மாகச் சொன்னார்.

முல்லாவின் தகப்பனாருக்கு சுமார் 125 வயது இருக்கலாம். ஆனால் முல்லா சொல்லுகிறார், தான் மது, மாதுவைத் தொடுவது இல்லை. அதுதான் தன் நீண்ட ஆயுளுக்குக் காரணம் என்று. ஆனால், அவர் தந்தை, தன் 125வது வயதிலும் குடித்துவிட்டு பெண்ணைத் துரத்திக் கொண்டிருக்கிறார்.

நீங்கள் உங்கள் உடலை எடுக்கும்பொழுதே மரணமும் உண்டாகிவிடுகிறது. தாயின் கர்ப்பத்தில் நீங்கள் நுழையும்பொழுதே, மரணமும் சேர்ந்தே வருகிறது. உங்களுடைய வாழ்க்கை எனும் கடிகாரம், 70 அல்லது 80 ஆண்டுகள் ஓடுவது என்பது ஆயுள் சம்பந்தப் பட்ட விஷயம். ஆனால் உங்கள் நீண்ட ஆயுளுக்கும்,


வாழ்ந்த வாழ்க்கைக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. 'இறப்பு' என்பது தவிர்க்க முடியாதது. வெல்ல முடியாதது.

"பால் உணர்வு மரணத்தோடு இணைந்து இருக்கும் பொழுது, இயற்கையான பிரம்மச்சரியம் என்றால் என்ன?" என்று கேள்வி எழுந்தது.

பிறப்பும், இறப்பும் பால் உணர்வோடு சம்பந்தப் பட்டவைதான். ஆனால் உங்களது பிரம்மச்சரியத்தினால் நீங்கள் மரணத்தைத் தாண்டிச் செல்ல முடியாது. ஏனெனில் பிறப்பிலேயே இறப்பும் நிகழ்ந்துவிட்டது. இதைத் தாண்டிச் செல்ல வேறு வழியே இல்லை.

இறப்பு நிகழத்தான் செய்யும். ஏன், அது ஏற்கனவே நிகழ்ந்துவிட்டது என்றுகூட சொல்லலாம். அது தன்னை வெளிப்படுத்திக்கொள்ளுவது என்பது நேரத்தைப் பொறுத்த விஷயம். ஒவ்வொரு வினாடியும், அதை நோக்கித்தான் ஓடிக்கொண்டிருக்கிறீர்கள்.

ஆகவே, மரணத்தைத் தவிர்க்க, பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பதால் மட்டும் பிரயோஜனமில்லை. ஏனெனில் அதுவே ஒரு பயத்தை உண்டுபண்ணிவிடும். பிரம்மச் சரியத்தைக் கடைப்பிடிப்பவர்கள் பிறகு இறப்பைக் கண்டு பயப்படுகிறார்கள்.

எப்பொழுது ஒருவன் மரணத்தைக் கண்டு பயப்படுகிறானோ, அவனால் அதைப் புரிந்துகொள்ள முடியாது. அதேபோல் இறப்பில்லாத தன்மையையும் அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. ஆகவே, பயத்தை ஒழியுங்கள்.

பிரம்மச்சரியம் தன்னிச்சையாக நிகழவேண்டும். நீங்கள், "தன்னிச்சையான பிரம்மச்சரியம் என்றால்

என்ன?" என்று கேட்கிறீர்கள். பிரம்மச்சரியம் என்பதே தன்னிச்சையாக, இயல்பாகத்தான் நிகழக்கூடியது. வேறு எந்தமாதிரியான பிரம்மச்சரியமும் கிடையாது. அது இயல்பாக நிகழாவிட்டால் அதற்கு பிரம்மச்சரியம் என்று பெயர் இல்லை. அதை நீங்களே உங்கள்மேல் திணித்துக் கொள்ளலாம். ஆனால் இதனாலெல்லாம் எந்த பிரயோஜனமும் இல்லை. இப்படியெல்லாம் செய்தால் அது உண்மையான பிரம்மச்சரியம் ஆகாது.

அதற்கு மாறாக நீங்கள் அதிகமான பால் உணர்வுக்கு ஆளாவீர்கள். பால் உணர்வு உங்கள் உள் உணர்வில் பரவிவிடும். உங்களது விழிப்பற்ற நிலையில் நன்றாகக் கலந்துவிடும். உங்கள் கனவில் மற்றும் உங்களது ஆதார நிலையில் உங்கள் கற்பனையில் அது நன்றாக ஊடுருவி விடும்.

அதன்பிறகு நீங்கள் முன்னைக்காட்டிலும் மிகவும் பால் உணர்வுகொண்டு அவஸ்தைப்படுகிறீர்கள். நீங்கள் அதைப்பற்றியே நினைப்பதால் மறுபடியும் அதை அடக்க வேண்டிவரும். பொதுவாக, நீங்கள் எதையும் அடக்க நினைத்தால், மறுபடி மறுபடி அதை அப்படியே அடக்க வேண்டிவரும்.

ஏனெனில், உங்களால் அதில் ஒருபோதும் பூரண வெற்றியடைய முடியாது. ஆகவே பால் உணர்வை ஒழிக்க, அடக்குதலோ ஒடுக்குதலோ சரியான வழியில்லை.

உண்மையில் அதை அடக்கி ஒழுங்குபடுத்தவே முடியாது. அதை அடக்கி ஒழுங்குபடுத்த நினைத்தவர்கள் அனைவரும் தோல்வி கண்டு, மிக வேகமாக, பால் உணர்வு படங்கள் உலகத்தில் பரவ வித்திட்டு விட்டார்கள்.



உங்களால் "சாமியார்கள்" என்று அழைக்கப்படுபவர்கள் மிக அதிகமான பால்உணர்வு கொண்டவர்கள். அவர்கள் தலையில் ஒரு பொந்து செய்து ஒரு ஜன்னலைப் பொருத்தி அதன் வழியே அவர்களது மண்டைக்குள் பார்த்தால் அதிக பால் உணர்வு மற்றும் அதை ஒட்டிய சங்கதிகளைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பதைக் காண்பீர்கள். அது அப்படித்தான் இருக்க முடியும்.

ஆகவே, எந்தவித பிரம்மச்சரியத்தையும், உங்கள் மேலே திணித்துக்கொள்ளாதீர்கள். பால் உணர்வைப்பற்றி அறிந்து கொள்ள முயலுங்கள். அதனுள் ஆழமாகச் சென்று அதைப் புரிந்துகொள்ளுங்கள். அதற்கென்று உள்ள ஒரு போற்றத்தக்க அழகு அதன் ஆழத்தில் இருக்கிறது.

அது ஓர் அபூர்வமான பரிபூரண வாழ்வின் மிகப்பெரிய அதிசயம். ஓர் அற்புத ரகசியம். வாழ்வு அதிலிருந்துதான் மலர்கிறது. பால் உணர்வு பாபகரமான காரியம் இல்லை. இதை அடக்குதல் தான் பாபகரமான காரியம்.

பால் உணர்வு இயற்கையானது. தன்னிச்சையானது. அதை அடக்குவதற்கு நீங்கள் எதையும் செய்யக்கூடாது. அது உங்களுடன் பிறந்திருக்கிறது. அது உங்களுடைய உள் மையத்தின் ஒரு பகுதி. அதை வெறுக்காதீர்கள். அதன்மேல் தீர்ப்பு சொல்லாதீர்கள். அதைக்கண்டு பயப்படாதீர்கள். அதோடு சண்டை போடாதீர்கள். வெறுமனே அதனுள் தைரியமாகச் செல்லுங்கள்.

ஒரு யோகமாக அதைக் கருதி செயல்படுங்கள். அது உங்களின் ஆழ்ந்த அமைதியில் நிகழட்டும். அப்பொழுது தான் அதன் மைய நிலையை நீங்கள் புரிந்துகொள்ள முடியும்.

நீங்கள் எப்பொழுது அதன் உச்சகட்ட நிலைமையை அறிந்து கொள்ளுகிறீர்களோ, அப்பொழுதுதான் அதில் உங்களுக்கு உள்ள ஈடுபாடு மெல்ல மெல்லக் குறைவதை உணருவீர்கள்.

உங்களுடைய சக்தி மெல்ல மெல்ல அதைத் தாண்டி மேலே செல்வதை உணர்வீர்கள். உங்கள் பால் உணர்வு குறைந்து, அன்பு மெல்ல மேலிடுவதை உணருவீர்கள். இது தன்னிச்சையாக உங்கள் கட்டாயம் ஏதும் இல்லாமல் நிகழும்.

நீங்கள் அதிகமாக அன்பு செலுத்துங்கள் என்று நான் கூறவில்லை. நீங்கள் உங்களது பால் உணர்வின் ரகசிய மையத்துக்குச் சென்றால் அன்பு தானாகவே தன்னிச்சை யாக எழும்பும் என்று சொல்லுகிறேன். பால் உணர்வு மெல்ல மெல்லக் குறைய, உங்கள் அன்பின் தன்மை படிப்படியாக தானாகவே கூடிக்கொண்டே போகும்.

பிறகு ஒருநாள், சகல பால் உணர்வும் புகை மூட்டம்போல் மறைந்து, அன்பு என்ற ஜுவாலை மட்டும் எரியும். அப்பொழுது அந்த ஒழுங்கற்ற பால் உணர்வு சக்தியானது, அதிநுட்பமான வாசனையைப் போல், மென்மையான அன்பாக மாறிவிடும்.

பிறகு அன்பினுள் ஆழமாகச் செல்லுங்கள். அப்பொழுது நீங்கள் அன்பின் மையத்தை அடைவீர்கள். அந்த சமயம் உங்களுக்குள் ஒரு தெய்விக இசை பிறக்கும். இது தன்னிச்சையாகவே வெளிப்படும். உங்களது பால் உணர்வில் உங்கள் இச்சை உடல் மேல் அதிகமாகும். அன்பில் நீங்கள் அதிகமாக மனதில் கவனம் வைக்கிறீர்கள். அந்த தெய்விக இசையில் நீங்கள் உங்கள் ஆத்மாவோடு கலப்பதை திடீரென்று உணர்வீர்கள். ஆகவே பால் உணர்வு



என்னும் வகையில் மேற்சொன்ன மூன்று கட்டங்கள் மறைந்திருக்க வாய்ப்பு உள்ளது.

அன்பில், பால் உணர்வு மறைந்திருக்கிறது. தெய்விக இசையில் மறைந்திருக்கிறது. அன்பு பிறகு அது ஓர் இயற்கையான பிரம்மச்சரியத்தை வெளிப்படுத்துகிறது.

கீழை நாட்டுச் சொல்லான "பிரம்மச்சரியம்" என்பது மிகவும் அழகானது. அர்த்தமுள்ளது. இதற்கு நேரான அர்த்தம் என்னவென்றால், "கடவுளைப்போல் வாழ்வது" என்பதாகும்.

உங்கள் முழு சக்தியும், ஒரு தெய்விகத் தோத்திரம் தான். அது மலரும் கருணை நன்றியின் வெளிப்பாடு. ஓர் ஆசீர்வதிக்கப்பட்ட வாழ்த்தாகும். பிறகு அவன் பரிபூரணத் தெய்வத்தன்மை உள்ளவனாகிறான்.

பால் உணர்வு தெய்விகமானது அல்ல என்று நான் கூறவில்லை. அதுதான் எல்லாவற்றிற்கும் விதை, ஆதாரம். அன்பு அதில் உண்டான மரம், ஆத்மீக ராகம், அதில் பூத்த நறுமலர்கள். ஆக, பால் உணர்வு சக்தியானது. நீங்கள் அதற்கு நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கிறீர்கள். ஏனெனில் சகலமும் பால் உணர்விலிருந்துதான் உண்டாகிறது.

அதாவது வாழ்வு, மரணம், அன்பு, ஆத்மீக ராகம், அடுத்து கடவுள் தன்மை எல்லாமே பால் உணர்விலிருந்து தான் வருகிறது. உங்களது வாழ்க்கை அமைப்பின் வரைபடத்தை அது தாங்கிக்கொண்டு இருக்கிறது. என்னைப் பொறுத்தவரை பால் உணர்வு என்பது வெறுமனே ஓர் இச்சை அல்ல; எல்லாமே அதுதான்.

நீங்கள் ஆரம்பத்திலிருந்தே அதற்கு எதிர்மறையான கருத்துகளை உண்டாக்கிக்கொண்டால் வாழ்வின் முழுத் தன்மையையும் இழந்துவிடுவீர்கள். நீங்கள் ஒரு மௌன யுத்தத்தில் ஈடுபட்டு விடுவீர்கள். அது உங்களை எங்கேயோ இழுத்துச் சென்றுவிடும். அந்த யுத்தத்தில் நீங்கள் தோற்பது சர்வ நிச்சயம்.

பால் உணர்வு சக்தியில் கடவுள் தன்மை மறைந்திருப்பதால் உங்களால் அதைத் தோற்கடிக்க முடியாது. அதேபோல அன்பும், தெய்விக இசையும் அதில் மறைந்திருப்பதால் உங்களால் அதை எப்படி வெல்ல முடியும்? பால் உணர்வு சக்தி உலகம் பூராவும் பரவிக் கிடக்கிறது. அதில் நீங்கள் மிகச்சிறிய பொருள். இந்த உலகத்து உயிர்கள் அனைத்திலும் பால் உணர்வு சக்திதான் நிறைந்திருக்கிறது.

ஆனால், இந்த உலகத்தில் மிகவும் வெறுக்கத்தக்க சொல் எதுவென்றால், ''பால் உணர்வு'' என்ற சொல்தான். அது சகதியில் வீழ்ந்து கிடக்கிறது. அதை எடுத்துச் சுத்தம் செய்ய வேண்டும். அதைச் சுற்றி ஒரு கோயில் எழுப்ப வேண்டும். நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். பிரம்மச்சரியம் என்பது தானாகவே பரிணமிக்க வேண்டும். தானே வெளிப்படுத்திக்கொள்ள வேண்டும். வேறு எந்த வழியும் அதற்குக் கிடையாது.

அது உங்கள் அடக்குதலுக்கு கட்டுப்படாது. அது ஒரு ஒழுங்குக்கு கட்டுப்பட்டதல்ல. அது உங்கள் சக்தியின் பரிணாமத்தை பரிபூரணமாக அறிந்து கொள்ளுதல் ஆகும். அதற்காக முயற்சி செய்தல் ஆகும்.



கேள்வி 4: "அன்புள்ள ஓஷோ! எங்கள் வாழ்க்கையில் என்ன செய்யவேண்டும் என்று யாரும் உத்தரவு இட அனுமதிக்கக்கூடாது என்று சொல்லுகிறீர்கள். இது எப்படி நம் ஆத்மாவுடன் பொருந்தும் என்றும், இதற்கும் நாங்கள் உங்களிடம் சரணாகதி அடைவதற்கும் என்ன சம்பந்தம் என்று விளக்குவீர்களா?"

முதலில் நான் ஒரு ''ஒருவருமில்லை'' (Nobody). இப்பொழுது இந்தக் கேள்வியை மறுபடியும் பார்ப்போம். நீங்கள் "உங்கள் வாழ்க்கையில் என்ன செய்ய வேண்டும் என்று யாரும் உத்தரவு போடக்கூடாது'' என்று சொன்னீர்கள். நான் உங்களைக் கேட்டுக்கொள்வதால் நீங்கள் என்னிடம் சரணாகதி அடைய வேண்டாம். ஆனால் என்னிடம் சரணாகதி அடைய நீங்கள் விரும்பினால் நான் என்ன செய்ய முடியும்?

நீங்கள் சரணாகதி அடைய மனப்பூர்வமாக விரும்பினால் அது உங்கள் சொந்த விருப்பம். நான் உங்களை வற்புறுத்தினால் நீங்கள் என் பேச்சைக் கேட்க வேண்டாம். ஆனால் உங்கள் இருதயம், அதற்கு கட்டளை இட்டால் நீங்கள் என்ன செய்ய முடியும்?

நீங்கள் என்னிடம் வாருங்கள் என்று சொன்னால் நீங்கள் கேட்க வேண்டாம். ஆனால் உங்களது சுய உணர்வு "நீ இந்த மனிதனோடு சேரு" என்று சொன்னால் நீங்கள் அதன்படி நடந்துதான் ஆகவேண்டும்.

ஆனால் என்னிடத்தில் யாரும் இல்லை. நீங்கள் என்னுள் ஆழ்ந்து சென்று பார்த்தால் நான் ''யாருமில்லை'' என்பதை அறிந்துகொள்வீர்கள். இந்த வீட்டில் யாரும் இல்லை. இந்த முழு இடமும் உங்களுடையது. நான் ஒரு வெட்டவெளியாக இருக்கிறேன்.

நீங்கள் பார்க்கும் இந்த நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் மனிதன் இறந்து பல வருடங்கள் ஆகின்றன. இதனுள் உங்களை கட்டளை இட எந்தப் பொருளும் இல்லை.

நேற்று இரவு ஞானத்தைத் தேடும் ஒரு பெண் என்னிடம் வந்து, "நான் சரணாகதியைத் தவிர மற்ற சந்நியாசிகள் செய்யும் அனைத்தையும் கடைப்பிடிக்க சித்தமாக இருக்கிறேன். என்னால் என் சுதந்திரத்தை இழக்க முடியாது. என் சிறு பிராயம் முதல் நான் பல விடுதிகளில் கட்டுப்பாட்டுடன் வளர்க்கப்பட்டேன். இப்பொழுது மறுபடியும் நான் இன்னொரு கட்டுப்பாட்டில் வாழ பயப்படுகிறேன்" என்றாள். அதற்கு நான் "கவலைப்படாதே, நான் உனக்கு பரிபூரண சுதந்திரம் அளிக்கிறேன்" என்றேன்.

'சந்நியாசம்' என்றாலே சுதந்திரம் என்றுதான் அர்த்தம். நீங்கள் அதை சரியாகப் புரிந்துகொண்டால் அது ஒரு முழுமையான சுதந்திரம்தான்.

அந்தப் பெண் நான் சொல்லிய கருத்தைப் புரிந்து கொண்டாள். நான் அவளிடம், "நீ இப்பொழுது ஒரு கட்டுப்பாட்டிலிருந்து இன்னொரு கட்டுப்பாட்டுக்குள் நுழைய பயப்படுகிறாய். ஆனால் சகல வல்லமை பொருந்திய உன்னுடைய அகங்காரம்தான் உன்னைக் கட்டுப்படுத்தும் பெரிய சிறை என்பதை நீ அறிந்து கொள்ளவில்லையா? நீ எத்தனையோ கூட்டுக்குள் வசித்து அவையெல்லாம் ஒரு சிறை என்று அறிந்திருக்கிறாய்."

ஆனால் உன்னுடைய உண்மையான சிறை உன் அகங்காரம்தான். நீ ஒரு யாருமில்லாததிடம் சரணாகதி அடைந்தால் அது உன்னை கட்டுப்படுத்தாது. அதேசமயம் உன் அகங்காரம் உனக்கு ஓர் சிறையாக மாறக்கூடிய அபாயமும் நீங்கிவிடும்."



'நான்' என்பது என்னிடம் இல்லாத காரணத்தால் நீ என்னிடம் சரணாகதி அடைந்தால், நீ உண்மையிலேயே என்னிடம் சரணாகதி அடையவில்லை. நான் உன்னுடைய சரணாகதிக்காக ஒருபோதும் மகிழ்ந்தது இல்லை.

நீ என்னிடம் சரணாகதி அடைந்தாலும் அடையாவிட்டாலும் எனக்கு எல்லாமே ஒன்றே. எந்த வித்தியாசமும் கிடையாது. உண்மையில் நீ என்னிடம் சரணாகதி அடைந்தால் அது உன்னிடமே, உன் ஆத்மாவிடமே சரணாகதி அடைந்ததாக அர்த்தம்.

உண்மையில், அப்பொழுது உன் அகங்காரம்தான் சரணாகதி அடைகிறது. நான் அதற்கு ஒரு கருவிதான். ஆனால், நீ ஒரு நதியிடமோ அல்லது ஆகாயத்திடமோ அல்லது நட்சத்திரத்திடமோ சென்று சரணாகதி அடைய முடியாது. அது மிகவும் கஷ்டம். அப்பொழுது உன்னை பலர் பரிகசிக்கக்கூடும்.

ஆகவே உங்களுக்கு உதவ நீங்கள்தான் ஒரு கேலிப் பொருளக பிறர் கருதாமல் இருக்க நான் உங்கள் முன்னால் இருப்பது போல் பாவனை செய்கிறேன். இங்கே உங்கள் அகங்காரத்தை சமர்ப்பிக்கலாம். அதை எடுத்துக்கொள்ள இங்கே யாரும் இல்லை. அதனால் மகிழ்ச்சியடையக் கூடியவர்களும் யாரும் இல்லை. ஆனால், அது உங்களுக்குத்தான் உபயோகம்.

இதைப்போன்ற நடவடிக்கையை புத்தர் 'உபயா' என்று அழைத்தார். பிறரின் காலில் விழாமல் வேறு எதன் கீழும் தன்னுடைய அகங்காரத்தைவிட முடியாதவர்

களுக்கு உதவி செய்வதற்காக இந்த வார்த்தை ஒரு கருவியாகும்.

அதேபோல நான் என்னுடைய பாதங்களை உங்களுக்காக வைத்திருக்கிறேன். ஆனால் என் உள்ளே எதுவும் இல்லை.

கேள்வி 5: "ஏன் உங்களுக்கு மத சம்பந்தமான பெயர்களையே வைக்கிறீர்கள்? அது எங்களுக்கு அர்த்தம் ஏதும் இல்லாததாகத் தெரிகிறது. இந்த ஆஸ்ரமத்துக்கு வெளியில் இந்தியர்கள் எங்களை சுவாமி என்று அழைக்க மிகவும் சங்கடப்படுகிறார்கள்."

நான் உங்களுக்கு 'சுவாமி' என்று பெயர் சூட்டுவது அடுத்தவர் உங்களை 'சுவாமி' என்று மரியாதையாக அழைப்பதற்காக அல்ல. நீங்கள்தான் அந்தப் பெயரின் பின்னால் மனதை அலைய விடுகிறீர்கள். சுவாமி என்ற பெயருக்கு அர்த்தம் என்னவென்றால், "பிரபு", "அரசன்" "உயர்ந்தவன்" என்று சொல்லலாம்.

அடுத்தவர் உங்களை மேற்கண்டவாறு எண்ண வேண்டும் என்று ஏங்காதீர்கள். உங்களுடைய உண்மையான பாதை என்ன என்பதைக் காட்டவே இந்தப் பெயரினால் உங்களை அழைக்கிறேன்.

அதற்கு முக்கிய காரணம், நீங்கள் உங்களுக்கே அரசனாக உயர்ந்தவனாக ஆகவேண்டும் என்பதுதான். அடுத்தவர் உங்களுக்கு அடிமையாகி உங்களை உயர்த்த வேண்டும் என்பதற்காக அல்ல. உங்களுக்கே நீங்கள் மாஸ்டர் ஆகவேண்டும் என்பதுதான் குறிக்கோள்.



நீங்கள் சுய குருவாக மாறவேண்டும். அடுத்தவர் உங்களை 'சுவாமி' என்று அழைக்காவிட்டால் மிகவும் வேதனைப்படாதீர்கள்.

உண்மையில் உங்களை ஒருவர் 'சுவாமி' என்று அழைத்தால்தான் நீங்கள் மிகவும் எச்சரிக்கை அடைய வேண்டும். ஏனெனில் அதன் பின்னே, ஏதோ அபாயம் இருக்கிறது. நீங்கள் அதற்குப் பின், உங்களை நீங்களே மிகவும் புனிதமானவர்களாகவும், அடுத்தவர்களைவிட மிகவும் உயர்ந்தவர்களாகவும் சிந்திக்க ஆரம்பித்து விடுவீர்கள்.

இதைப்போன்ற முட்டாள்தனமான எண்ணங்களை சுமக்க ஆரம்பிக்காதீர்கள். நான் உங்களைப் புனித மானவர்களாக அல்லது மற்றவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்களாக ஆக்க இங்கே உட்கார்ந்திருக்கவில்லை.

அந்த 'சுவாமி' என்ற பெயர் அடுத்தவரைப் பொறுத்த வரையில் அர்த்தம் ஏதும் இல்லாமல் இருக்கவேண்டும் என்பதற்காகவே அதை உங்களுக்குச் சூட்டுகிறேன். உண்மையில் என் முழு விருப்பம் என்னவென்றால் உங்களை பரிகசிக்கத் தகுந்தவர்களாகவும், அர்த்தமற்ற வர்களாகவும், அடுத்தவர் உங்களைப் பார்த்து சிரிக்க வேண்டும்.

அதேபோல நீங்களே - உங்களைப் பார்த்துச் சிரித்துக்கொள்ள வேண்டும் - இதுதான் நான் உங்களுக்கு 'சுவாமி' என்று பெயர் சூட்டுவதன் ரகசியமும், விருப்பமும் ஆகும்.

இதைத் தவிர, இன்னொரு காரணமும் இருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில் புனிதமற்றவன், புனித

முடையவன் என்று இரண்டு வகைப் பாகுபாடுகள் கிடையாது. புனிதமற்றவனும், புனிதமுடையவனே. அதேபோல் மிகவும் சாதாரணமானவனையும், மிக உயர்ந்தவனாகவே கருதுகிறேன். இயற்கை அனைத்தையும், மிக உயர்ந்ததாகவே கருதுகிறேன்.

இந்த உலகத்தைவிட்டு கடவுள் எங்கேயோ இருப்பதாக நான் கருதவில்லை. கடவுள் இந்த உலகத்திலேயே இதனுடனேயே கலந்தே இருக்கிறார். இதுதான் என்னுடைய அணுகுமுறை. இந்த உலகத்தில் உள்ள அனைத்தும் புனிதமானவையே.

பழைய மத வழக்கப்படி, ஒருவன் மதத்தில் ஈடுபாடு உடையவன் என்றால் அவன் வாழ்க்கையிலிருந்து விலகியே இருக்க வேண்டும். அவன் இந்த வாழ்க்கையை மிக சாதாரணமானது என்றும், புனிதமற்றது என்றும், மாயை, அர்த்தமில்லாதது என்றும் ஒதுக்கித் தள்ளவேண்டும்.

அவன் சகலத்தையும் துறக்க வேண்டும். ஆனால் நான் இந்த வாழ்க்கையில் உள்ள எதையும் துறக்க முடியாத அளவுக்கு அவற்றை மிகவும் நேசிக்கிறேன். அந்த உணர்வை அதிகரிக்கச் செய்யவே நான் வந்திருக்கிறேன்.

நான் இந்த மாதிரி மத சம்பந்தமான பெயர்களை உங்களுக்குச் சூட்டுவதன் மூலம், நீங்கள் அடுத்தவர்களை விட உயர்ந்தவர்கள் என்று அர்த்தத்தில் செய்யவில்லை. 'நான் மற்றவர்களைவிட புனிதமானவன்' போன்ற எண்ணங்களை உண்டாக்கிக்கொள்ளாதீர்கள். அது முட்டாள்தனமானது.

நான் இந்த ஆரஞ்சு நிற காவி உடையை உங்களுக்கு அளித்திருக்கிறேன். இது ஒரு குறிப்பிட்ட காரணத்துக்காக



பல காலமாக அணிவிக்கப்பட்டு வந்திருக்கிறது. அதில் முக்கிய காரணம் நீங்கள் சாதாரண வாழ்க்கை அமைப்பிலிருந்து வேறுபட்டவர்கள் என்பதைக் காண்பிப்பது என்பதும் ஒன்றாகும்.

நான் இந்த வேறுபாட்டை அழிக்க முயலுகிறேன். ஆகவே நான் இதை உங்களுக்கு அளிக்கிறேன். அதேசமயம் உங்களையும் வாழ்க்கையிலிருந்து பிரிக்க விடாமலும் பண்ணுகிறேன்.

நீங்கள் சாதாரண வாழ்க்கையில் இருக்கவேண்டும். அதில் வேலை செய்யவேண்டும். இரண்டறக் கலந்து செல்ல வேண்டும். நீங்கள் சந்தைக்கூடத்திலேயோ, கடைகள் மற்றும் உற்பத்திக்கூடம் போன்றவற்றிலேயோ மிகச் சாதாரணமாகச் செல்ல வேண்டும்.

நீங்கள் ஒரு கூலி ஆளாகவோ, டாக்டராகவோ, இன்ஜினீயராகவோ இருக்கலாம். நான் உங்களிடம் இதைப்போன்ற எந்த வேறுபாட்டையும் உண்டாக்க விரும்பவில்லை. இதைப் போன்ற தனிப்பட்ட உயர்வான எண்ணங்கள், உண்மையில் மதத்தன்மை வாய்ந்தவை இல்லை. அதைப் போன்ற எண்ணங்களையெல்லாம் ஒழிப்பதற்காகவே, இந்தக் காவி நிற அங்கியை உங்களுக்கு அளித்திருக்கிறேன். ஆகவேதான், பழைய வழக்கத்தில் உள்ள சந்நியாசிகள் என்னை மிகவும் வெறுக்கிறார்கள்.

நான் அவர்களது புனிதமான தன்மைகளை அழிக்கிறேன். நான் அவர்களது சமூக உயர்வான அந்தஸ்தை ஒழிக்கிறேன். ஆகவே இன்னும் கூடிய விரைவில் நீங்கள எந்தவித வித்தியாசத்தையும் பார்க்க முடியாது.

என்னுடைய சுவாமிகள் மிக அதிகமாக வளர்ந்து கொண்டு இருக்கிறார்கள். அதனால் பழைய காவி சந்நியாசிகள் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து விடுவார்கள்.

ஆகவே ஜனங்களுக்கு யார் புதிய சந்நியாசிகள், யார் பழைய சந்நியாசிகள் என்ற வேறுபாடே தெரியாது. இந்த காவி உடையின் நோக்கம் இதுதான். நான் இந்த மத வாழ்க்கையை ஒரு சாதாரண வாழ்க்கையாக ஆக்க முயலுகிறேன். இதில்தான் உண்மையான வாழ்வே அடங்கி இருக்கிறது. மற்றவை அனைத்தும் அகங்கார மனப்பான்மையுடன் கூடியது.

இந்த சாதாரண வாழ்க்கை மிகவும் அழகானது. இதைவிட ஓர் உயர்வான வாழ்க்கையை உண்டாக்கத் தேவையில்லை.

இந்த சாதாரண வாழ்க்கையில் ஆழமாகச் செல்லுங் கள். விரைவில் அதன் மிக ஆழ்தன்மை உங்களுக்கு காட்டப்படும். மிக அற்புதத்தன்மை, அரிய வழிகள் கொண்டதுதான் இந்த சாதாரண வாழ்க்கை. ஆகவே இதில் உள்ள புனிதமற்ற தன்மை, புனிதத் தன்மை போன்ற வித்தியாசங்களை நாம் விட்டுவிட வேண்டும். இது ஒரு பெரிய மதப் புரட்சிதான். வெளியில் என்ன நடந்து கொண்டு இருக்கிறது என்று உங்களுக்குப் புரியாமல் இருக்கலாம்.

பழைய வழக்கங்களில் ஊறிப்போனவர்கள் என்னை எதிர்ப்பதை நான் புரிந்துகொள்ளுகிறேன். ஏனெனில் அவர்களது 'மற்றவர்களைவிட புனிதமானவர்கள்' என்ற அகங்கார எண்ணங்களை அடியோடு அழிக்கிறேன்.



ஆகவேதான், முக்கியமாக இந்தக் காவி உடையை தேர்ந்து எடுத்தேன். அது பல காலமாக பழைய சந்நியாசிகளின் உரிமை பெற்ற அங்கியாகும். அதேசமயம் அவர்களது பழைய வழிமுறைகள், கோட்பாடு சித்தாந்தம் எதையும் எடுத்துக்கொள்ளவில்லை.

நீங்கள் இப்பொழுது செய்ய வேண்டியது விழிப்புணர்வு, வாழ்வில் அன்பு செலுத்துதல், அதை மதித்தல், அதில் சாட்சியாக இருந்து பார்த்தல் இவைகள்தான். அதற்காகவே நான் இந்தக் காவி உடையை உங்களுக்கு அளித்திருக்கிறேன்.

ஆனால், என்றைக்கு இந்த அங்கியால் ஏற்பட்ட பழைய கோட்பாடுகள் மறைந்து போகின்றனவோ, நான் அப்பொழுதே இந்த அங்கியிலிருந்து உங்களை விடுதலை செய்து விடுவேன்.

அது அதன் தனித்தன்மையை இழக்க வேண்டும். அதன்பிறகு அதற்கு வேலை இல்லை. ஆனால் அதை அடைய பல நாளாகும். ஏனெனில் அந்தத் 'தன்மை' பல காலமாக ஊறித்திளைத்து வந்திருக்கிறது. அதை அழிப்பது அவ்வளவு சுலபமில்லை.

வெளியில் உங்களைப் பற்றி உண்மையாக என்ன நினைக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரிய வாய்ப் பில்லை. நீங்கள் இந்தக் காவி உடையோடு உங்களது பெண் நண்பர்களோடு செல்லும்பொழுது ஜனங்கள் அதை எப்படி எதிர்கொள்ளுகிறார்கள் என்பது பற்றி உங்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை.

ஏனெனில் இதைப்போல ஒரு சந்நியாசி, ஒரு பெண்ணுடன் உலவுவதை அவர்களால் நினைத்துப்

பார்க்க இயலாது. இது பல நூற்றாண்டு காலமாக ஏற்பட்ட பழக்கமாகும்.

அவர்களால் இதை எளிதில் ஜீரணிக்க இயலாது. அப்படி இருக்கும்பொழுது அவர்கள் உங்களை எப்படி 'சுவாமி' என்று மரியாதையாக அழைப்பார்கள்? அவர்கள் உங்களைக் கொல்லாமல் விடுவதே பெரிய காரியம்! அவர்களது பழைய நம்பிக்கைகளை நீங்கள் அழிக்கிறீர்கள்.

அவர்களைப் பொறுத்தவரையில் ஒரு சந்நியாசி என்பவன் பெண்களை கண்ணெடுத்துப் பார்க்கக்கூடாது. பெண்ணைத் தொடுவது, அவர்களது கைகளை சேர்த்துக் கொண்டு செல்வது என்பது அவர்களால் நினைத்துக்கூட பார்க்க முடியாத விஷயம். உங்களை அடித்துத் துரத்த இந்தக் காரணமே போதும்!

நான் ஒரு புதிய சந்நியாசத்தை உண்டாக்கி இருக்கிறேன். அதற்கு 'நியோ சந்நியாஸ்' (Neo- Sanyas) என்று பெயர். நான் ஏதாவது புதியது செய்தால் அதற்கு ஒரு முறையை ஏற்படுத்துகிறேன்.

அது உங்களுக்குப் புரிந்து இருக்குமா என்று எனக்குத் தெரியவில்லை. முக்கியமாக நான் அந்த பழைய வழக்கக் கோட்பாடுகளை அழிக்கவே முயற்சி செய்கிறேன்.

சமயமே வாழ்வாக மலரவேண்டும். சமயத்தில் வாழ்வு இருக்கக்கூடாது. ஒரு சந்தைக்கும், ஓர் ஆஸ்ரமத்துக்கும் எந்தவித வேறுபாடும் இருக்கக்கூடாது. ஆஸ்ரமம், சந்தையிலும் இருக்க வேண்டும். அன்றாட வாழ்க்கையில் சமயக்கோட்பாடுகள் கலந்தே செயல்பட வேண்டும். வாழ்க்கை வேறு, சமயம் வேறு அல்ல.



பொகோஜு (Bokoju) என்ற ஞானியை, "நீங்கள் என்ன செய்கிறீர்கள்? உங்களது சமயக் கோட்பாடுகள் என்ன?" என்று சிலர் கேட்டார்கள்.

அதற்கு அவர், "நான் மிகச் சாதாரண வாழ்க்கையில் வாழ்கிறேன். இதுதான் என் கொள்கை. எனக்குப் பசி எடுத்தால் புசிக்கிறேன். தூக்கம் வந்தால் தூங்குகிறேன். அவ்வளவுதான்" என்றார்.

ஆமாம். ஒரு வாழ்க்கை என்பது இப்படித்தான் இருக்க வேண்டும். ஆனால் கேள்வி கேட்டவர் மிகவும் குழப்பம் அடைந்து, "ஆனால் நீங்கள் செய்வதில் நான் எதையும் தனித் தன்மையாகப் பார்க்க முடியவில்லையே" என்றார்.

அதற்கு பொக்கோஜு, "ஆமாம், அதுதான் முக்கியம். அதில் எந்தவித தனித் தன்மையும் கிடையாது" என்றார்.

தனித்தன்மைக்காக ஏங்கும் எல்லாரும் அகங்காரத்தின் பின்னேதான் செல்கிறார்கள்.

கேள்வி கேட்டவர் மறுபடியும், "நீங்கள் செய்வதைத் தான் எல்லாரும் செய்துகொண்டு இருக்கிறார்கள். பசி எடுத்தால் புசிக்கிறார்கள். உறக்கம் வந்தால் தூங்குகிறார்கள்" என்றார் மறுபடியும்.

பொக்கோஜு சிரித்துக்கொண்டு, "அப்படி இல்லை. அவர்கள் செய்வதிலும், நான் செய்வதிலும் ஒரு வேறுபாடு உண்டு. நீங்கள் சாப்பிட்டுக்கொண்டு இருக்கும்பொழுது, உங்கள் மனம் ஆயிரக்கணக்கான எண்ணங்களை அசை போட்டுக்கொண்டு இருக்கும்.

நீங்கள் கனவு காண்பீர்கள். கற்பனை செய்வீர்கள். வேறு எதையோ நினைத்துக்கொண்டு இருப்பீர்கள். நீங்கள் சாப்பிடும்பொழுது அங்கே நீங்கள் உண்மையில்

இல்லவே இல்லை. ஆனால் நான் சாப்பிடும்பொழுது நான் சாப்பிட மட்டும்தான் செய்கிறேன். வேறு எந்த சிந்தனையும் எனக்குக் கிடையாது.

அதேபோல, நீங்கள் தூங்கச்செல்லும் பொழுது ஆயிரம் கற்பனைகள், கனவுகள், எதிர்ப்புகள் என்று பல சிந்தனையில் மூழ்குகிறீர்கள். ஆனால் நான் தூங்குவ தானால், தூங்க மட்டும்தான் செய்கிறேன். வேறு எதுவும் கிடையாது. வேறு எந்த சிந்தனைக்கும் இடம் கிடையாது. ஏன், பொக்கஜூ என்பவரே அங்கு கிடையாது. சாப்பிடுவதனால் அங்கு சாப்பிடுதல் மட்டும்தான் இருக்கும். அதேபோல் நடப்பதானால் நடப்பது மட்டுந்தான் இருக்கும். அங்கு பொக்கோஜூ இல்லை" என்றார்.

நீங்களும் இதைப்போல செயல்பட வேண்டும் என்று விரும்புகிறேன். சாதாரணமாகச் செயல்படுங்கள். ஆனால் உங்களுடைய சாதாரண வாழ்க்கையில் ஒரு விழிப்புணர்வுத்தன்மையைக் கொண்டு வாருங்கள்.

கடவுள் தன்மையை உங்கள் சாதாரண வாழ்க்கையில் கொண்டு வாருங்கள். உங்கள் ஒவ்வொரு சாதாரண செயல்களிலும் கடவுளை அறிமுகப்படுத்துங்கள். தூங்குங்கள். சாப்பிடுங்கள். அன்பு செலுத்துங்கள். பிரார்த்தனை மற்றும் தியானம் செய்யுங்கள்.

ஆனால் அவை எவற்றிலும் எதையும் தனித்தன்மை யாகச் செய்வதாக நினைத்துக்கொள்ள வேண்டாம். அப்படி நீங்கள் செயல்பட்டால் உங்களுக்கே ஒரு தனித்தன்மை வந்துவிடும். ஏனெனில் அப்பொழுது மற்றையோர் செய்வதைக் காட்டிலும் வேறுபடுகிறீர்கள்.



எப்பொழுது ஒரு மனிதன் மிகச்சாதாரணமாக வாழத் தயாராகுகிறானோ, அப்பொழுது அவன் மிக அசாதாரணமானவனாக மாறுகிறான். ஏனெனில் மிக அசாதாரணமாக, மிகத் தனித்தன்மையாக வாழ விருப்பப்படுவது என்பது எல்லாரும் மிகச் சாதாரணமாக ஆசைப்படுவது, மிக நிதானமாக, மிக ஓய்வாக, மிகச் சாதாரணமாக வாழ்வது என்பது உண்மையில், மிக அசாதாரணமானது.

**கேள்வி 6: முதலும், முடிவும் இல்லாத, புதிர் போன்ற இந்த வாழ்க்கை எதற்காக? தயவு செய்து விளக்குங்கள்.**

இப்பொழுது நான் மட்டும்தான் புரிந்துகொள்ள முடியாத பதில்கள் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் நீங்களும் இப்போது புரியாத கேள்விகளைக் கேட்க ஆரம்பித்து விட்டீர்கள்! இந்த வாழ்க்கை ஏன் புரிந்துகொள்ள முடியாததாக உள்ளது? என்று கேட்கிறீர்கள். எனக்கு எப்படித் தெரியும் என்று எதிர்பார்க்கிறீர்கள்? அது அப்படித்தான்! அது ஒரு விளக்க முடியாத உண்மை. நான் அதைப்பற்றிய கொள்கை விளக்கம், அநுமானம் எதையும் கூற விரும்பவில்லை.

வாழ்க்கை ஒரு புதிர் என்று எதையும் நானாகக் கூற ஆசைப்படவில்லை. அப்படி நான் கூற முற்பட்டால் நீங்கள் ஏன் அப்படி என்று கேட்பீர்கள். ஆனால் அது அப்படித்தான்!

இந்த மரம் ஏன் பச்சையாக இருக்கிறது? என்று நீங்கள் கேட்டால் நான் என்ன பதில் சொல்லுவது? அது பச்சையாக உள்ளது. ஏனெனில் அது பச்சையாக

அமைந்திருக்கிறது. அங்கு ஏன் அப்படி என்ற கேள்விக்கே இடமில்லை.

உங்களுடைய 'ஏன் அப்படி' என்ற கேள்விக்கு விடை கிடைத்துவிட்டால் வாழ்வு புதிராக இருக்காது. வாழ்வு ஓர் புதிராக இருப்பதற்குக் காரணமே அந்த 'ஏன்' என்ற கேள்விக்கு விடை கிடைக்கவில்லை என்பதுதான்.

''முதலும், முடிவும் இல்லாத புரிந்துகொள்ள முடியாத இந்த வாழ்வு ஏன்?'' என்று கேட்கிறார்கள். இதன் மூலம் இந்த வாழ்வு இப்படி அமைந்ததற்கு நான்தான் காரணம் என்ற ஒரு குற்ற உணர்வை என்னுள் ஏற்படுத்தி இருக்கிறீர்கள்; அது உண்மைதான். ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால் என்ன செய்வது? அதற்கு உண்மையில் ஆரம்பமும் இல்லை. முடிவும் இல்லையே?

ஒரு நிகழ்ச்சியை சொல்லுகிறேன்.

தன் சீடர்களில் ஒருவரிடம் முல்லா நசுருதீன் ''வாழ்வு ஒரு பெண்ணைப் போன்றது'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். நான் இதைக் கேட்டு ஆச்சரியம் அடைந்தேன். அவர் மேற்கொண்டு என்ன சொல்லப் போகிறார் என்பதை ஆவலுடன் கேட்க முனைந்தேன்.

"அவர், ''ஒரு மனிதன், நான் ஒரு பெண்ணைப் புரிந்து கொண்டேன் என்று சொன்னால், அவன் தற்பெருமை பேசுபவனாகவே இருப்பான். அவர்களைப் புரிந்து கொண்டேன் என்று சொல்லுபவன், ஒரு தந்திரசாலியாகவும் ஏமாற்றுக்காரனாகவும், ஒரு நிலையான கொள்கை இல்லாத பச்சோந்தி போல் இருப்பான். அவன் ஏதோ ஒரு எதிர்பார்ப்புடன் வாழ்வான். அதற்கு மாறாக ஒருவன் அவர்களைப் புரிந்துகொள்ளவில்லை என்று சொன்னால், அவன்



அவர்களைப் புரிந்துகொள்ள ஆசைப்படாதவனாகவே இருப்பான்.

அதனால் அவன் அவர்களைப் புரிந்து கொண்டது போல் நடக்கவும் தேவை இல்லை. ஏனெனில் அவர்களை அறிந்து கொள்ளவே அவன் விரும்பவில்லை. இணைந்து வாழ மட்டும் விரும்புகிறான். ஆகவே, பிறகு அவன் அவர்களை அறிந்துகொண்டவனாகிறான்'' என்றார்.

இதைப்போலத்தான் வாழ்வும். வாழ்வு ஒரு பெண்ணைப் போலத்தான். அதை அறிந்துகொள்ள முற்பட்டால் உங்களுக்கு குழப்பம்தான் ஏற்படும். முதலில் அதை புரிந்துகொள்ள வேண்டும் என்பதை மறந்துவிடுங்கள்.

அதில் முழு ஈடுபாட்டோடு வாழ முற்படுங்கள். அப்பொழுது அறிந்துகொள்ளுவீர்கள். இந்த 'புரிந்து கொள்ளுதல்' என்பது அறிவுப்பூர்வமானதாகவோ, கொள்கை கோட்பாடு உடையதாகவோ இருக்காது. இந்த 'புரிந்துகொள்ளுதல்' ஒரு முழுமையானது. அதை வார்த்தையால் வெளியிட முடியாது. அது வார்த்தைக்கும் அகப்படாதது.

வாழ்வு ஒரு புதிர் என்று சொல்லுவதன் அர்த்தம் இதுதான். அதில் நாம் வாழ முடியும். ஆனால் அதைத் தீர்மானிக்க முடியாது. விளக்க முடியாது. அவ்வளவுதான். 'அது' என்று உங்களுக்குப் புரியும், ஆனால் அதைப் பற்றி பிறருக்குச் சொல்லத் தெரியாது. அதற்குப் பெயர்தான் புதிர், விளக்க முடியாதது என்று பெயர்.

வாழ்வு ஓர் புதிர் என்று நாம் சொல்லும்பொழுது, அது ஒரு தொல்லைத் தரக்கூடியது. தீர்க்கமுடியாதது என்று

அர்த்தம் அல்ல. ஒரு கஷ்டம், ஒரு தொல்லையை தீர்த்து வைக்க முடியாது. தீர்க்க முடியாதது என்பது அதனுள்ளேயே அடங்கி இருக்கிறது.

ஆனால் வாழ்வு புரிந்துகொள்ள முடியாததாக இருப்பது நல்லதுதான். அப்படி இருந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். வாழ்வு ஒரு விளங்க முடியாததாக இருந்து, அப்படி ஒருவர் வந்து உங்களுக்குத் தெளிவுபடுத்தினால் நீங்கள் மேற்கொண்டு என்ன செய்வீர்கள்? நீங்கள் தற்கொலை செய்து கொள்வதைத் தவிர வேறு எதுவும் செய்யமாட்டீர்கள்! அதுகூட அப்பொழுது அர்த்தமில்லாததாக ஆகிவிடும்.

வாழ்வு ஓர் அற்புதமான புதிர்தான். அதைப்பற்றி நீங்கள் அதிகமாக அறிய அறிய, அதனுடைய அழகு கூடிக் கொண்டே போகும். ஒரு கட்டத்தில் அதனுடன் முழுமையாக வாழ ஆரம்பித்து விடுவீர்கள். அப்பொழுது அதனுடனே செல்ல ஆரம்பித்துவிடுவீர்கள்.

ஓர் பேரின்பத் தொடர்பு அதனுடன் உங்களுக்கு ஏற்படும். ஆனால் அது என்ன - எப்படி என்பதை உங்களால் விளக்கிச் சொல்ல முடியாது. அதனுடைய ஆழமும் அழகும் அதுதான். ஆமாம். வாழ்விற்கு ஆரம்பமும், முடிவும் இல்லைதான். எப்படி இருக்க முடியும்? ஆரம்பம் என்பது ஓர் முடிந்துபோன ஒன்றிலிருந்து தோன்றுவது. அதேபோல முடிவு என்பது ஏதோ ஒன்று அதுவரை இருந்து, பிறகு ஒன்றுமில்லாததாக ஆவது. இது வாழ்வைவிட மிக அற்புதமான புதிர்தான்.

ஏனெனில் நாம் வாழ்விற்கு ஆரம்பம் ஏதும் இல்லை என்று கூறும்போது, அது எப்பொழுதும் அப்படியே உள்ளது என்று கூறுவதாகவே அர்த்தமாகும்.



எப்பொழுதும் உள்ளதற்கு எப்படி ஓர் ஆரம்பம் இருக்க முடியும்? ஒரு கோடு போட்டுக்காட்டி வாழ்வு இந்த இடத்திலிருந்துதான் ஆரம்பித்தது என்று கூறமுடியுமா? ஆனால் கிறிஸ்துவக் கொள்கை என்ன தெரியுமா? இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன், ஒரு திங்கள்கிழமை, வாழ்க்கை ஆரம்பமாயிற்று என்று சொல்லுகிறார்கள். அப்படி இருந்தால் அது ஒரு திங்கள் காலைப்பொழுதில்தான் ஆரம்பமாகி இருக்க வேண்டும்.

ஆனால் ஞாயிறு என்று ஒன்று அதற்கு முன்னே இல்லாமல் எப்படி திங்கள் என்ற ஓர் ஆரம்பம் ஏற்பட முடியும்? 'இரவு' என்று ஒன்று முதலில் இல்லாமல் 'பகல்' என்ற ஒன்று எப்படி ஆரம்பமாகும்? நன்றாக யோசனை செய்யுங்கள்.

நீங்கள் அதைக் கோடிட்டுக்காட்ட முடியாது. அது முட்டாள்தனமானது. நீங்கள் ஒரு கோடு போட்டுக் காட்டக்கூட, அதற்கு முன் ஏதோ ஒன்று தேவைப்படு கிறது.

அப்படி இல்லாவிட்டால் கோடு போட்டு இரண்டாகப் பிரித்துக்காட்ட முடியாது. இரண்டு பொருள்கள் இருந்தால்தான் ஒரு கோடு போட்டுக்காட்ட முடியும்.

ஆனால் ஒன்று மட்டும் இருந்தால் எப்படி கோடு போட முடியும்? எதன் மேல் கோடு போட முடியும்? பக்கத்தில் ஒருவர் வசித்தால்தானே நீங்கள் உங்கள் வீட்டைச் சுற்றி வேலி போட முடியும்? பக்கத்தில் யாரும் வசிக்காவிட்டால் உங்கள் வேலிக்கு என்ன அர்த்தம் இருக்க முடியும்? வேலியே தேவை இல்லையே?

நன்றாக யோசனை செய்யுங்கள். அந்த வேலிக்கு அப்பால் ஒன்றுமே இல்லை என்றால் உங்கள் வேலியே அந்த ஒன்றுமில்லாததில் விழுந்துவிடும். அது இருப்பதற்கு ஏதோ ஓர் ஆதாரம் தேவை இல்லையா? ஆகவே, ஒரு திங்கள் காலை உயிர் வாழ்க்கை ஆரம்பமானது என்றால் அதற்கு முன் ஒரு ஞாயிற்றுக் கிழமை தேவை. இல்லாவிட்டால் திங்கள் ஆரம்பத்திற்கு அர்த்தமே இல்லை. திங்களே தோன்றி இருக்க முடியாது.

அதேபோல தோற்றம் எப்படி இல்லையோ முடிவும் அதற்குக் கிடையாது. வாழ்வு இருக்கிறது. இருந்தது. அது அழிவில்லாதது. அவ்வளவுதான்.

ஆகவே, அதைப்பற்றிய ஆராய்ச்சியை கைவிடுங்கள். அப்படி அதைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தீர்கள் என்றால் அதை இழந்துவிடுவீர்கள். ஏனெனில் உங்கள் வாழ்நாள் பூராவும், அந்த சிந்தனைதான் இருக்கும். அதனால் நீங்கள் அடையப்போவது ஒன்றுமில்லை. அந்த நேரத்தை அந்த இடைவெளியை அந்த சக்தியை வாழுவதற்காக உபயோகியுங்கள்."

**கேள்வி 7: நீங்கள் ஏன் தவம் செய்தலை, ஓர் இறக்கும் கலை என்று வர்ணிக்கிறீர்கள். அதை ஏன் வளரும் கலை என்று சொல்லக்கூடாது?**

நான் அதை 'வளரும் கலை' என்று குறிப்பிட்டால் உங்களுடைய அகங்கார மனம் திருப்தியுறும் என்று தெரிந்துதான் அதை 'இறக்கும் கலை' என்று சொன்னேன்.

ஒரு கதை சொல்லுகிறேன்:

ஒரு நாள் நகரத்தில் உள்ள ஓர் கிணற்றைச் சுற்றி கூட்டம் கூடியிருப்பதை முல்லா நசுருதீன் பார்த்தார்.



அந்தக் கிணற்றில் ஒரு பெரிய தலைப்பாகை அணிந்த ஓர் முஸ்லிம் பாதிரியார் விழுந்திருந்து 'உதவி உதவி' என்று சத்தம் போட்டுக்கொண்டிருந்தார். ஜனங்கள் கிணற்றில் குனிந்து "பாதிரியாரே, உங்கள் கையைக் கொடுங்கள். கையைக் கொடுங்கள்" என்று கேட்டு அவரைத் தூக்கிவிட நினைத்தார்கள்.

ஆனால் அந்தப் பாதிரியார், அவர்களது வேண்டுகோளை காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. மேலும் மேலும் அவர் தண்ணீரில் போராடிக்கொண்டு "உதவி, உதவி" என்று கூவிக் கொண்டிருந்தார்.

கடைசியில், முல்லா நசுருதீன் முன்வந்து, தன் கையை அவர் முன்நீட்டி, "என் கையைப் பிடித்துக்கொள்ளுங் கள்" என்று சொன்னார். உடனே அந்தப் பாதிரியார், முல்லாவின் கையைப் பற்றி மேலே வந்தார்.

ஜனங்கள் ஆச்சரியம் அடைந்து முல்லாவிடம், "நீங்கள் எப்படி அவரை மேலே வர உதவினீர்கள்" என்று கேட்டார்கள். அதற்கு முல்லா, "அது ரொம்ப சுலபம். ஒரு கஞ்சன் எதையும் பிறருக்கு கொடுக்க மாட்டான். அது தன் கையாக இருந்தாலும் சரி. ஆகவேதான், நான் "உங்கள் கையைக் கொடுங்கள்" என்று கேட்பதற்குப் பதிலாக, "என் கையைப் பிடித்துக்கொள்ளுங்கள்" என்று கூறினேன். நான் நினைத்தது போலவே அவரும் என் கையைப் பிடித்துக் கொண்டார்" என்றார்.

"வளரும் கலை" என்று சொல்லுவது உங்களுக்குப் பிடிக்கும் என்று எனக்குத் தெரியும். அப்படிக் கூறினால் உங்கள் மனம் திருப்திப்படும் என்றும் எனக்கும் தெரியும்.

உங்கள் மனம், "ஆமாம்! நாம் செய்வது நாம் வளர்வதற்காகவே. ஆகவே நான் வளர்ந்து மிக நல்ல நிலைக்கு வருவேன்" என்று கூறிக்கொள்ளும். இதைத்தான் உங்கள் அகங்கார மனம் விரும்பும். ஆகவேதான், நான் தெரிந்தே அதை 'இறக்கும் கலை' என்று அழைத்தேன். 'தவம் செய்தல்' என்பது ஓர் இறக்கும் கலைதான். இது உங்கள் மனதுக்கு அதிர்ச்சியாகத்தான் இருக்கும்.

ஆனால், அப்படி அதை அழைப்பதுதான் சரியானது ஆகும். ஏனெனில் தவம் செய்தல் ஒருவகையில் உங்கள் அகங்காரத்தை உங்கள் முனைப்பை அழிப்பதற்கு ஒப்பாகும். உங்கள் அகங்காரத்தைப் பொறுத்தவரையில் இரண்டே வழிகள்தான் உண்டு. ஒன்று அது வளர்ந்து கொண்டே செல்லவேண்டும். அல்லது மறைந்து கொண்டே செல்ல வேண்டும்.

உங்கள் மனம், தன் முனைப்பின் மேலும் மேலும் வளர்ந்து உறுதியானால், அது அழிவிற்குத்தான் உங்களை இட்டுச்செல்லும். அது கொஞ்சம் கொஞ்சமாக உங்களை இறுக்கிவிடும். உங்களைச் சுற்றி ஒரு சிறையை உண்டாக்கிவிடும். அதனால் நீங்கள் திணறுவீர்கள். முடிவில், அதுதான் உங்களுக்கு நரகமாகிவிடும். இந்த அகங்கார வளர்ச்சி, ஒரு புற்றுநோய் மாதிரிதான். அது உங்களுக்குத் தெரியாமலேயே உங்களை மெல்ல மெல்ல சாகடிக்கும்.

ஆகவே யோகம், தவம் செய்தல் எல்லாம் அகங்காரத்தை வளரவிடாமல் தடுக்கும். அது உண்மையில் அகங்காரத்தின் மரணந்தான்.





# 3
# ஆழமாக வாழுங்கள்

கேள்வி 8: "நீங்கள் இறப்பைப் பற்றி அதிகமாகப் பேசப் பேச வாழ்வதற்கான என் ஆசை மிகவும் அதிகரித்துக்கொண்டே போகிறது. நான் இதுவரை புரிந்துகொண்டேன். வாழ்வும், மரணமும் நெருங்கிவரும் பொழுது வாழ வேண்டும் என்ற துடிப்பு, ஆவல் மிக அதிகமாவதை உணருகிறேன். என்னுடைய நிறைவேறாத ஆசைகளை துறக்கும் எண்ணத்தைக் கைவிட மறுக்கிறேன். ஒருவன் இதுவரை அடையாததை எப்படி துறக்க முடியும்? உண்மையோ அல்லது மாயையோ, நான் இன்னும் உடல் அளவில் சகலத்தையும் அனுபவிக்கத் துடிக்கிறேன். இதைப் போன்றதோர் ஆவல் எனக்கு இதற்கு முன் ஏற்பட்டதில்லை. இது எனக்கு ஆச்சரியமாகவும் உள்ளது. தயவு செய்து விளக்குங்கள்."

நான் "இறந்துவிடுங்கள்" என்று சொல்லும்பொழுது நீங்கள் "ஆழமாக வாழுங்கள்" என்ற அர்த்தத்தில்தான் சொல்லுகிறேன். நீங்கள் முழுமையாக, ஆழமாக வாழாமல் எப்படி இறக்க முடியும்? முழுமையான வாழ்வில்தான் இறப்பும் அடங்கி இருக்கிறது.

அந்த ஆழமான - அழுத்தமான வாழ்வில் ஏற்படும் மரணம், மிகவும் அழகாகவே இருக்கும். அப்பொழுது இறப்பு மிக இயல்பாகவும், அமைதியாகவும், மிக இன்பமாகவே அமையும்.

நான் "இறந்துவிடுங்கள்" என்று சொல்லும்பொழுது வாழ்விற்கு எதிராக எதையும் சொல்லவில்லை. உண்மையில் நீங்கள் மரணத்திற்குப் பயந்தால், நீங்கள் வாழ்வுக்கும் பயப்படுகிறீர்கள் என்று அர்த்தம். இந்த கேள்வியைக் கேட்டவருக்கு இது நேர்ந்திருக்கிறது.

ஒரு மனிதன் மரணத்திற்குப் பயந்தால், அவன் வாழவும் பயப்படுகிறான் என்று சொன்னேன். ஏனெனில், வாழ்வு மரணத்தைத்தான் அழைக்கிறது. நீங்கள் உங்கள் எதிரிக்குப் பயந்து உங்கள் கதவுகளை மூடிக்கொண்டால் அது உங்கள் நண்பரது வருகையையும் தடுக்கும் என்று புரிந்துகொள்ளுங்கள்.

உண்மையிலேயே உங்கள் நண்பர் வந்து கதவைத் தட்டினாலும், நீங்கள் திறக்கப் பயப்படுவீர்கள். அவர் உண்மையில் நண்பனா அல்லது எதிரியா என்று எப்படித் தீர்மானிப்பது? நண்பன்கூட எதிரியாக மாறலாம். கதவை நண்பனுக்காக திறக்கும்பொழுது எதிரிகூட நுழைந்து விடலாம். யார் கண்டது? இப்படியெல்லாம் சந்தேகப்படு வீர்கள்.

இறப்பைக் கண்டு பயப்படுவதால், மக்கள் வாழ்வைக் கண்டும் பயப்படுகிறார்கள். அவர்கள் இயல்பாக உண்மையாக வாழவே இல்லை. அப்படி அவர்கள் வாழ்ந்தால், அதன் உச்சத்தன்மையில், மரணம் அதனுள் ஊடுருவதை உணரலாம்.

இதை நீங்கள் எப்பொழுதாவது உணர்ந்திருக் கிறீர்களா? பெண்களில் பெரும்பாலோர் ஓர் உணர்வற்ற வாழ்க்கையே வாழ்கிறார்கள். அவர்கள் கலவியின் உச்சத்தன்மையைக் கண்டு பயப்படுகிறார்கள்.

அந்த நேரத்து சக்தியின் முழு வெளிப்பாட்டை, அவர்களால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. ஏனெனில்,



அது மரணத்தின் அருகில் நெருங்குகிறது. ஆகவேதான் பல காலமாகவே பெரும்பாலான பெண்களுக்கு உச்ச உணர்வு என்றால் என்னவென்பதே தெரியாது. அவர்கள் உணர்வின் அடிமட்டத்திலேயே இருக்கிறார்கள்.

அதேபோல், பெரும்பாலான ஆண்கள்கூட இந்த பயத்தால் பீடிக்கப்பட்டு அவதிப்படுகிறார்கள். நூற்றுக்கு தொண்ணூற்று ஒன்பது பேர், இதேபோல உச்ச உணர்வு அடைவதற்கு முன்பே தன் சக்தியை வெளியேற்றி விடுகிறார்கள். உச்சத்தன்மையை அடைந்தாலும் அதில் நீடித்து நிற்கப் பயப்படுகிறார்கள்.

இப்பொழுது உள்ள பெரும்பாலான ஆண்கள், பெண்களுக்கு 'உச்ச உணர்வு' என்ன என்றே தெரியாது. அதை அடைய அவர்கள் பயப்படுகிறார்கள். ஏனெனில் அந்தத் தன்மையில் இறப்பு உள்ளே நுழைகிறது. அந்த உச்சத்தன்மையில் நீங்கள் இறப்பதுபோல உணருகிறீர்கள்.

ஒரு பெண் தன் உச்ச உணர்வில் தன்னை அறியாமலே முனகுகிறாள். கத்துகிறாள், செருமுகிறாள். சிலசமயம், "ஐயோ, நான் இறக்கிறேன். என்னை மேலும் கொல்லாதீர்கள்!" என்று கதறவும் செய்கிறாள். இப்படித்தான் நடக்கும்.

ஒரு கட்டத்தில் அந்த அதி உச்ச உணர்வில் உங்கள் அகங்கார மனம் இறந்து நிற்கும். ஒரு மனமற்ற நிலை ஏற்படும். அப்பொழுது அங்கே இறப்பு ஆக்கிரமித்து இருக்கும். அந்த அதிக உச்ச உணர்வின் அழகு அதுதான்.

அதேபோல மக்கள் உண்மையிலேயே அன்பு செலுத்தப் பயப்படுகிறார்கள். ஏனெனில் பூரண அன்பின் உணர்வில் இறப்பு ஊடுருவுகிறது. இரண்டு காதலர்கள் உண்மையிலேயே அன்பு வயப்பட்டிருந்தால் அங்கு பேசுவதற்கு ஒன்றுமே இல்லை.

ஏனெனில் பேசுதல் அவர்களின் உண்மையான அன்புக்கு இடையில் புகுந்து அவர்களைப் பிரித்து விடுகிறது. இரண்டு காதலர்கள் பேசிக்கொண்டே இருந்தால் அவர்கள் தங்கள் நெருக்கத்தை தவிர்க்கிறார்கள் என்று அர்த்தம். வார்த்தைகள் இடைவெளியை அதிகமாக்குகின்றன. மௌனம், இடைவெளியைக் குறைக்கிறது. அதேசமயம் இறப்பு தோன்ற வழிவகுக்கிறது. ஆழ்ந்த அமைதியில், இறப்பு முற்றிலும் ஆக்கிரமிக்கிறது. அது ஒரு அழகான- இயல்பான நிகழ்ச்சியே.

ஆனால் மக்கள் அது தேவையா அல்லது தேவையற்றதா என்பன போன்ற விவாதத்தில் தம் பய உணர்வை மறைப்பதற்காக சர்ச்சையில் ஈடுபட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அவர்களால் அமைதியாக இருக்க முடியவில்லை. ஏனெனில் அமைதி இறப்புக்கு அழைத்துச் செல்லுகிறது.

இரண்டு காதலர்கள் அமைதியாக உட்கார்ந்திருந்தால் அங்கே இறப்பு சூழ்ந்து கொள்ளுகிறது. அப்பொழுது அவர்களிடத்தில் ஒரு நேரம் மகிழ்ச்சியும், மற்றொரு சமயம் துக்கமும் நிகழ்வதைப் பார்க்கலாம்.

ஏனெனில் வாழ்வின் உச்சத்தில் மகிழ்வும் அதேசமயம் அந்த உச்சத் தன்மையில் இறப்பும் ஊடுருவுவதால் துக்கமும், மகிழ்வும் மாறி, மாறி ஏற்படுகின்றன.

நீங்கள் எப்பொழுதாவது, அமைதியாக இருந்தால் ஒரு மாதிரித் துக்கத்தன்மை உங்களை ஆக்கிரமிப்பதை உணரலாம். ஒரு ரோஜா மலரை அமைதியாக உட்கார்ந்து நீங்கள் பார்த்துக்கொண்டே இருந்தால் அந்த அமைதியில் திடீரென்று ஓர் இறப்பு உணர்வை உணருவீர்கள். அந்த மலர் மெல்ல வாடி, பிறகு உதிர்ந்து கீழே விழுந்துவிடும். அவ்வளவுதான்.



அவ்வளவு அழகான அந்த மலர் அவ்வளவு மென்மையானது. அந்த அற்புத அழகு சில கணங்களில் மறைந்தே போய்விட்டது. அது திரும்பியே வராது. இந்தப் புதிரை என்னவென்று சொல்லுவது? இந்த சோகம் உங்களை திடீரென்று தரிக்கும்.

நீங்கள் தவம் செய்யும்பொழுது உங்களைச்சுற்றி இறப்பு சூழ்வதை உணருவீர்கள். முழுமையான அன்பின் வெளிப்பாட்டில், கலவியின் உச்ச உணர்வில், எந்த ஒரு கலையின் முழு ஈடுபாட்டில், உதாரணமாக, சங்கீதம், கவிதை, நாட்டியம் போன்று எங்கெங்கே உங்களை நீங்களே மறக்கிறீர்களோ, எங்கே உங்கள் அகங்கார மனம் மறைகிறதோ அங்கு இறப்பு ஆக்கிரமிக்கிறது.

ஆகவே, ஒன்று சொல்லுகிறேன். நீங்கள் இறப்பதற்குப் பயப்படுவதால் வாழ்வதற்கும் பயப்படுகிறீர்கள். நீங்கள் எப்படி இறக்க முடியும் என்பதை நான் உங்களுக்குக் கற்றுக்கொடுக்க ஆசைப்படுகிறேன். அப்பொழுதுதான் உங்களுக்கு இறப்பைப் பற்றிய பயம் உங்களை விட்டு அகலும். நீங்கள் எப்பொழுது இறப்பைப் பற்றிய பயத்தை விடுகிறீர்களோ, அப்பொழுதுதான் நீங்கள் வாழ்வதற்கு தயாராகுகிறீர்கள்.

நான் வாழ்வதற்கு எதிராக எதுவும் சொல்லவில்லை. அதற்கு மறுப்பாக நான் எதைச் சொல்ல முடியும்? நான் வாழ்வை எப்படி நேசிக்கிறேன் தெரியுமா? முழு அன்புடன் அதை நேசிப்பதால், நான் இறப்பையும் அடிக்கடி சந்திக்கிறேன்.

ஏனெனில், இறப்பும் வாழ்வின் ஒரு பகுதிதான். நீங்கள் வாழ்வை முழுமையாக நேசித்தால், இறப்பை உங்களால் எப்படி ஒதுக்க முடியும்? நீங்கள் இறப்பையும் விரும்பித்தான் ஆகவேண்டும். நீங்கள் ஒரு மலரை

விரும்பி நேசித்தால், அது மலர்ந்து உதிர்வதையும் நேசிக்கத்தான் வேண்டும்.

நீங்கள் ஒரு பெண்ணை உண்மையிலேயே விரும்பி னால் அவளின் வயதான நிலையிலும் அவளை விரும்பத் தான் வேண்டும்.

அதேபோல் அவள் இறக்கும்பொழுதும் அதையும் விரும்பித்தான் ஆகவேண்டும். இத்தனை சம்பவங்கள் அடங்கியதுதான் ஒரு பெண். அவளுடைய முதுமை வெளியிலிருந்து வந்தது அல்ல; அவளுக்குள்ளேயே காலத்தால் மாற்றம் அடைகிறது.

அவளுடைய வழுவழுப்பான முகம், முதுமையில் சுருக்கம் காண்கிறது. நீங்கள் அவளை மிகவும் ஆழமாக நேசித்தால் அந்த சுருக்கத்தையும் நேசிக்கத்தான் வேண்டும்.

ஏனெனில் அந்த சுருக்கங்கள் இப்பொழுது அந்த பெண்ணின் ஓர் அங்கமே. நீங்கள் ஒரு ஆணை முழுமையாக நேசிக்கிறீர்கள். அவனது முதுமையில் அவனது தலைமுடி வெண்மையாகிறது. நீங்கள் அந்த வெண்மையையும் நேசிக்கத்தான் வேண்டும். அது வெளியிலிருந்து ஒரு விபத்தினால் ஏற்பட்டது அல்ல, வாழ்வு விரிந்துகொண்டே செல்லக்கூடியது.

இப்பொழுது அந்தக் கருமை நிற முடி மாறி, வெண்மையாகிவிட்டது. அதை நீங்கள் ஒதுக்காதீர்கள். வெறுக்காதீர்கள். ஏனெனில் அது அவனின் ஓர் அங்கம் தான். நீங்கள் அதை நேசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள்.

அதேபோல அவன் வயோதிகத்தையும், இயலாமையையும் நேசியுங்கள். பிறகு ஒருநாள் அவன் மறைந்தே விடுவான். அப்பொழுது அதையும் நேசியுங்கள்.



உண்மையான அன்பு எல்லாவற்றையும் நேசிக்கும். அன்புக்கு அன்பைத் தவிர வேறு எதுவும் தெரியாது. ஆகவேதான், அன்பும் இறப்புக்குச் சமம் என்று கூறினேன். நீங்கள் இறப்பையும் விரும்பி அன்பு செலுத்தினால் வாழ்வின் மீது அன்பு செலுத்துவது என்பது மிக எளிது. அது ஒன்றும் கஷ்டமில்லை.

ஆனால் சங்கடம் எங்கே வருகிறது என்றால் இந்த கேள்வியைக் கேட்டவர் தன் வாழ்நாளில் பலவற்றை அடக்கி வைத்துக்கொண்டு இருந்ததால், இப்பொழுது வாழ்வைக் கண்டு பயப்படுகிறார். இந்த அடக்கி வைக்கப்பட்ட ஆசைகள் இப்பொழுது அபாயகரமான நிலைக்கு வந்திருக்கின்றன.

மேலும் மேலும் இப்படியே அடக்கிக்கொண்டு போனால் அவர் இயற்கை உணர்வையெல்லாம் மறந்து ஒரு ஜடம்போல்தான் வாழ்வார். அவருடைய அழகை ரசிக்கும் தன்மை, இரக்க உணர்வு, தெய்விக நினைவு அனைத்தையும் பிறகு இழந்துவிடுவார். ஒரு கட்டத்தில் அவர் எதைச் செய்தாலும் அதில் அழகோ, அன்போ இருக்காது.

ஓர் அழகிய கதை சொல்லுகிறேன்.

சின்மயா இதை எனக்கு அனுப்பி இருக்கிறார். அவர் மிகவும் ரசிக்கக்கூடிய ஜோக்குகளை அனுப்புவார்.

ஒரு சமயம், ஒரு கப்பல், ஒரு தொலைதூர இடத்துக்கு அனுப்பிவைக்கப்பட்டது. அங்கு குரங்கு கூட்டங்களைத் தவிர வேறு எதுவும் கிடையாது. முக்கியமாக பெண்களே கிடையாது. அங்கு சென்றபின் தன் கப்பலில் உள்ளவர்கள் அனைவரும் அந்த குரங்குகளுடன் சல்லாபித்துக் கொண்டி ருப்பதைப் பார்த்து கப்பலின் மாலுமி அதிர்ச்சி

அடைந்தார். 'இதைப்போன்ற அசிங்கமான செயலை நான் ஒருக்காலும் செய்யமாட்டேன்' என்ற அவர்களிடம் அவர் வெறுப்பாகக் கூறினார்.

அதற்கு அவர்கள், "நீங்கள் இப்படி பழைய வழக்கத்தில் இருக்காதீர்கள்" என்று சிரித்துக்கொண்டே கூறினார்கள். ஆனால் நாட்கள் ஆக ஆக அந்த மாலுமியால் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஒரு நாள் தன் கையில் அகப்பட்ட குரங்குடன் அவரும் சல்லாபிக்க ஆரம்பித்துவிட்டார். இதைப் பார்த்து மற்ற அனைவரும் சிரிக்கத் தொடங்கினர்.

இதைப் பார்த்து அந்த மாலுமி ஆச்சரியம் அடைந்து, "எதற்காக இப்பொழுது சிரிக்கிறீர்கள்... நீங்கள்தானே என்னை இப்படி செய்யத் தூண்டினீர்கள்" என்றார்.

அதற்கு அவர்கள், "நீங்கள் இருக்கிறதிலேயே மிகவும் அசிங்கமான குரங்கைத் தேர்ந்து எடுத்திருக்கிறீர்கள்" என்று சிரித்தார்கள்.

ஆகவே, நீங்கள் ஆசைகளை அடக்கி அடக்கி வைத்துக் கொண்டிருந்தால் முடிவில் ஓர் அசிங்கமான வாழ்க்கையில்தான் தள்ளப்படுவீர்கள். அப்பொழுது அந்த பயத்தால் நீங்கள் உங்கள் சுய உணர்வை இழந்து என்ன செய்கிறோம் என்று புரியாமல் தவிப்பீர்கள். கிட்டத்தட்ட ஒரு நரம்பு வியாதி உடையவராவீர்கள்.

ஆகவே, இந்த அடக்குதலை விட்டுவிட்டு வாழ்க்கையோடு ஒட்டி மிகவும் நிதானமாக நடந்து கொள்ளுங்கள். இதை அனுசரித்து ஒத்துழைத்துச் செல்லுங்கள். இது முழுக்க முழுக்க உங்களுக்காக கொடுக்கப்பட்ட வாழ்க்கை. அதில் குற்ற உணர்வுக்கே இடமில்லை.



இந்த வாழ்க்கையை நேசிக்க வேண்டும். அதில் முழுமையாக வாழ வேண்டும். அதைப்பற்றி நன்றாக அறிந்துகொள்ள வேண்டும். அதனுடனேயே இருந்து வரவேண்டும். அதை விலக்கக்கூடாது.

எந்தமாதிரியான நோக்கங்களை, கடவுள் உங்களுக்குக் கொடுத்திருக்கிறாரோ, நீங்கள் அதை முழுவதுமாக பின்பற்ற வேண்டும். இதன்மூலம் நீங்கள் 'நிறைவை' அடையவேண்டும். இது தேவை, தேவையற்றது, நல்லது, இது கெட்டது என்று தீர்மானிக்க நீங்கள் யார்?

இப்பொழுது நீங்கள் வாழும் வாழ்க்கைதான் முடிவானது அல்ல என்று எனக்குத் தெரியும். இதற்குப் பின்னால் ஓர் பேரின்ப வாழ்வு இருக்கிறது. ஆனால் அது மறைந்தே இருக்கிறது. இந்த வாழ்க்கைக்கு எதிராகச் சென்று அந்த வாழ்க்கையை அடைய முடியாது.

இந்த வாழ்க்கையை நீங்கள் முழுமையாக அனுபவித்துத்தான் அதற்குச் செல்ல முடியும். கடலின் மேல் அலைகள் அடித்துக்கொண்டே இருக்கின்றன. அந்த அலைகளுக்கு அடியில்தான் அமைதியான கடல் இருக்கிறது. அந்த அலைகளின் பாய்ச்சலையும் உறுமலையும் கண்டு பயந்து அதிலிருந்து தப்பித்து ஒட நினைத்தால் நீங்கள் அந்த ஆழமான - அமைதியான கடலின் உள்ளே செல்லுவதை தவிர்க்கிறீர்கள் என்று அர்த்தம்.

அதில் தைரியமாகக் குதியுங்கள். அந்த அலைகளும் அக்கடலின் ஒரு பகுதியே என்று புரிந்து குதியுங்கள். அந்த அலைகளின் ஊடே ஆழமாகச் செல்ல முயலுங்கள். அப்பொழுது அந்த அலைகள் மறைந்துவிடும். பிறகு ஒரே அமைதி. ஆழமான அமைதிதான்.

இந்தக் கேள்வியைக் கேட்டவருக்கு இதுதான் என் பதில். நீங்கள் இவ்வளவு காலம் காத்திருந்தீர்கள். போதும், இதற்குமேல் தேவை இல்லை.

ஓர் இத்தாலிய ஜோக் சொல்லுகிறேன். கேளுங்கள்.

போப்பின் நெருங்கிய வேலைக்காரன் அவருக்கு காலை உணவை எடுத்து வந்தான். அப்பொழுது கால் இடறி உணவெல்லாம் கீழே விழுந்துவிட்டது. அவன் கீழே தடுக்கி விழும்போது, "அட பாழாய்ப் போன கடவுளே" என்று கோபமாகக் கத்தினான். அந்த புனித போப்பாண்டவர் தன் அறையின் கதவைத் திறந்து வந்து "இங்கே யாரையும் சபிக்கக்கூடாது மகனே! அதற்கு பதில் 'மேரியே! மன்னியுங்கள்' என்று சொல்" என்றார்.

ஆனால் அடுத்த நாள் காலையும் இதேபோல் அந்த வேலைக்காரன் மறுபடியும் விழுந்தான். அப்பொழுதும் தன்னையறியாமல், "அட பாழாய்ப் போன கடவுளே" என்று கத்தினான். அதற்கு அந்த புனித போப் மறுபடியும், "சபிக்கக்கூடாது, மகனே! மேரியே மன்னியுங்கள்" என்று சொல்" என்றார்.

ஆனால் மூன்றாவது நாள் இதே போல் தடுக்கி விழும் பொழுது, மிகவும் பயந்துபோய் நடுங்கிக்கொண்டே, ஞாபகமாக, "மேரியே! மன்னியுங்கள்" என்று உருக்க மாகக் கூறினான்.

ஆனால் அதற்கு அந்த புனித போப்பாண்டவர், "போதும்! பாழாய்ப்போன கடவுளே என்று சொல்லு. இது மூன்றாவது தடவை. அவ்வளவுதான்" என்றார்.

மேலும் அவர், "இது உன்னுடைய வாழ்க்கை. ஒவ்வொரு நாளும் உன்னுடைய காலை உணவை தவறுதலாக வீணடிக்க வேண்டாம். இரண்டு தடவை



'மன்னியுங்கள்' என்று கோரலாம். ஆனால் மூன்றாவது தடவை கடவுளையே திட்டலாம். தவறில்லை" என்றார்.

கேள்வி 9: "ஒரு பெரிய மலையில், நான் ஒரு சிறிய பாறையாக இருக்கிறேன். இதைக்கூட உணருவதற்குத் தைரியம் இல்லை. ஆனால் அப்படி ஒரு கனவு காண ஆசைப்படுகிறேன். ஆனால் நீங்கள் ஆறு, கடல் மற்றும் ஆகாயம் என்று வாழ்வை வர்ணிக்கிறீர்கள். இந்த சிறிய வனுக்கு எப்படி நீங்கள் சந்நியாசம் கொடுக்க விரும்புகிறீர்கள்? ஒரு பெரிய மலைச்சிகரத்தில் நான் ஒரு சிறிய பாறையாகத் தானே இருக்கிறேன்?"

ஒவ்வொருவரும் தங்களைப் பொறுத்தவரையில் ஒரு சிறிய பாறைதான். நீங்கள் அந்த உச்சமான நிலையை அடைந்தால் அன்றி, நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு சிறிய பாறைதான். ஆனால் இப்பொழுது இப்படி இருப்பதில் ஒன்றும் தவறில்லை. ஏனெனில், உங்களுக்குள்ளே உள்ள கடவுள் தன்மை குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டி ருக்கிறது. ஆகவேதான், நீங்கள் உங்களை மிகச் சிறிய பாறையாக உணருகிறீர்கள். இப்பொழுது நீங்கள் அதை விழிப்படையச் செய்ய வேண்டும். ஆகவேதான், நான் உங்களுக்கு சந்நியாசம் கொடுக்கிறேன்.

நீங்கள் கேட்கிறீர்கள். "எனக்கு எப்படி சந்நியாசம் கொடுப்பீர்கள்?" என்று.

சந்நியாசம் வழங்குவது என்பது, உங்களை விழிப்படையச் செய்தல், உங்களைத் தட்டி எழுப்புதல், உங்கள் விழிப்புணர்வுக்கு ஓர் உதறல் கொடுத்தல் - இதைத் தவிர வேறில்லை. சந்நியாசம் என்பது ஓர் அலாரம் மணி போல் கருதுங்கள்.

"இப்படி என்னைக் கருதுவதற்கு (சிறிய பாறையாக)க் கூட தைரியம் இல்லை." என்று சொன்னீர்கள். "ஆனால் அப்படி கனவு காண்கிறேன்" என்கிறீர்கள்.

ஒரு பாறை எப்பொழுதும் தன் வளர்ச்சியை மறுக்கும். அது கனவு காண்பது மூலம் தன் எதிர்காலத்தையே பாழடித்துக்கொள்ளும். ஏனெனில் கனவு காணுதல் எப்பொழுதும் ஒரு தடைதான். கனவு காணுதல் மூலம் நாம் உண்மையிலிருந்து தப்பித்துக்கொள்ள முயற்சி செய்கிறோம்.

வேறு வழி தப்பிப்பதற்கு தெரியாததால், கனவு காண்கிறோம். இது ஒரு வழிதான் உள்ளது.

நீங்கள் என் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுதே கனவு காணலாம். நீங்கள் உடல் அளவில் இங்கே இருக்கலாம். ஆனால் உங்கள் மனமோ ஆயிரம் எண்ணங்களில் மூழ்கி மாறி மாறிச் சென்று கொண்டிருக்கும். உங்கள் எதிர்காலத்தைப் பற்றியோ அல்லது நடந்த நிகழ்ச்சியையோ அசை போடலாம். அதேபோல நான் சொல்லுவதற்கு ஒத்தோ அல்லது மாற்றமாகவோ உங்களுக்குள்ளே சர்ச்சை செய்துகொண்டு இருக்கலாம். அப்பொழுது நீங்கள் என்னைவிட்டு விலகியே நிற்கிறீர்கள். என்னை தவிர்க்கிறீர்கள்.

நான் இங்கு ஓர் "உண்மை"யாக இருக்கிறேன். இங்கு நீங்கள் எதையும் கனவு காணத் தேவையில்லை. நீங்கள் "நீங்களாக" மட்டும் இருங்கள். அப்பொழுது ஓர் அபூர்வமான தன்மையை அடைவீர்கள். ஒரு பெரிய மாறுதல் உங்களுக்குள் ஏற்படும்.

ஆனால், நாம் கனவு காண்பதிலேயே காலத்தைச் செலவிடுகிறோம். ஒருவன் ஒரு பெண்ணை விரும்பினால்



அவளைப்பற்றி கனவு காண்கிறான். சாப்பிடும்பொழுதும் கனவு காண்கிறான்.

சூரியன் உதயமாகும் காலை வேளையில், வாழ்வு மறுபடியும் மலரும் வேளையில், மற்றும் நடக்கும் பொழுதும், வேறு எதைப்பற்றியோ கனவு கண்டு கொண்டே செல்லுகிறான். அவன் சந்திப்பதில் எதிலும் கவனம் செலுத்துவது இல்லை.

கனவு காணுதல் நம்மை குருடாக்கி விடுகிறது. அதனால் ''உண்மை''யை தொலைத்துவிட்டே வருகிறோம்.

"ஓஷோ, நீங்கள் ஏன் ஆறு, கடல் மற்றும் ஆகாயம் என்று வர்ணிக்கிறீர்கள்?" என்று கேட்டீர்கள்.

ஏனெனில் அவற்றையெல்லாம் அடையக்கூடிய தகுதி உங்களுக்கு உண்டு என்று காட்டத்தான். இந்தப் பாறைக்கு இறக்கை முளைத்துப் பறக்கக்கூடிய தகுதி உண்டு. நானே ஒரு காலத்தில் ஒரு பாறையாகத்தான் இருந்தேன். பிறகு இறக்கை முளைத்துப் பறக்க ஆரம்பித்தேன். ஆகவேதான் சொல்லுகிறேன், உங்களுக்கும் அது சாத்தியம்தான். நீங்கள் அதை அறிந்திருக்க வாய்ப்பில்லை. ஆகவேதான் நான் கூற வேண்டியிருக்கிறது.

இந்தப் பாறை ஒரு மலராகவோ, ஒரு கடலாகவோ அல்லது ஆகாயமாகவோ மாறக்கூடும். அதனுடைய சாத்தியக் கூறுகள் அளவிடமுடியாதவை. கடவுளின் தகுதிகள் அனைத்தும் உங்களுக்கும் உண்டு என்று திடமாக நம்புங்கள். நீங்கள் பல பரிமாணங்கள் உடையவர்கள்.

ஆகவேதான், நான் அவற்றைப் பற்றியே பேசுகிறேன். அப்படி நான் பேசுவதால் இன்றோ அல்லது நாளையோ

